4 பக்கங்கள் 15 காசுகள்



# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 8—11—73 வியாழன் (மலர் 261

பதிவு எண்: எம். 879[illegible]



## இன்றைய தேசிய சர்வதேசிய நிலைமை

# மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அரசியல் தலைமைக்குழு அறிக்கை

கல்கத்தா நவ 6—

**மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழுவின் கூட்டம் அக். மாதம் 24-ந் தேதி முதல் 27-ந் தேதி வரை நடைபெற்றது. இக்கூட்டத்தில், தலைமைக்குழுவின் கடந்த கூட்டத்திற்கு பிறகு ஏற்பட்டுள்ள தேசிய சர்வதேசிய வளர்ச்சிப்போக்குகள் பரிசீலனை செய்யப்பட்டது.**

இக்கூட்டத்தில் மேற்கு ஆசிய நிகழ்ச்சிகளின் மீது முக்கிய கவனம் செலுத்தப்பட்டது. எகிப்தும் சிரியாவும் ஏனைய அரேபிய நாடுகளின் உதவியோடு பதினேழு நாட்கள் கடும் யுத்தத்தை மேற்கொண்டாலும், சூயசுக் கால்வாயின் கிழக்குக் கரையின் ஒரு பகுதியை மீண்டும் திரும்ப பிடித்துக்கொண்ட போதிலும் அவர்கள், சூயசுக் கால்வாயின் மேற்கு கரையில் உள்ள பகுதிகளையும், சிரியாவில் உள்ள கோலின் ஹெய்ட்ஸ் மலையின் பின் பகுதியையும் இழந்துள்ளனர்.

அரபு நாடுகளுக்கு சோவியத்யூனியன் ஆயுத சப்ளை செய்தது, எனினும் 1967-ம் ஆண்டு பந்தோபஸ்து கவுன்ஸிலின் தீர்மானத்தை மீறி, அளவு கடந்த முறையில் அமெரிக்கா ஆயுத சப்ளை செய்ததால், இஸ்ரேல் அரபு நாடுகளைக் காட்டிலும் ஆயுத பலம் கொண்டதாயிருந்தது.

இஸ்ரேலின் இந்த ஆயுத வல்லமை ஒன்றுபட்ட அரபுநாடுகளால் சந்திக்கப்பட்டு தோற்கடிக்கப்பட்டது. இதன் பொருட்டு அரபுநாடுகளில் உள்ள அனைத்து ஜனநாயக, புரட்சிகர சக்திகளை ஊக்குவித்ததால், இவ்விடுதலைப் போரில் அரபுநாட்டு மக்கள் அனைவரும் அந்தப்போரில் இணைக்கப்பட்டார்கள்.

பந்தோபஸ்து கவுன்சில் தீர்மானப்படி ஏற்பட்ட யுத்த நிறுத்தத்திற்கு பிறகு ஏற்பட்ட நிகழ்ச்சிப் போக்குகள் காட்டுவது என்னவென்றால் யுத்த நிறுத்த தீர்மானத்திற்கு அமெரிக்கா வஞ்சக உணர்வோடு வோட்டளித்துள்ளது என்பதும் அரபு நாடுகளுக்கெதிராக, இஸ்ரேலின் ஆக்கிரமிப்பை அமெரிக்கா தான் தூண்டி உத்வேக மூட்டியது என்பதுமாகும். இந்தச் சூழ்நிலையில், பந்தோபஸ்து சபையில் யுத்த நிறுத்த தீர்மானத்தை அமெரிக்காவோடு கொண்டுவந்த சோவியத்யூனியனுக்கு அத்தீர்மானம் முறைபாக செயலபடுத்தப்படுகிறதா என கண்காணிப்பது அதன் முக்கிய கடமையாக இருக்கிறது.

மத்திய கிழக்கில் தனது ஆதிக்கத்தை நிலைநாட்ட அமெரிக்க ஏகாதிபத்தியம் கடும் முயற்சிகளை மேற்கொள்ளும் என பொலிட்பீரோ எச்சரிக்கிறது. பாலஸ்தீன அகதிகளின் பிரச்சினைகளுக்கு சரியான தீர்வு காண்பதன் மூலமும், இஸ்ரேலினுல் கைப்பற்றப்பட்ட பகுதிகளிலிருந்து இஸ்ரேல் காலி செய்வதன் மூலமே சமாதானம் நிலைநாட்டப்பட முடியும் என பொலிட்பீரோ நம்பிக்கை கொண்டுள்ளது.

தற்காலிக பின்வாங்குதல் இருப்பினும் மேற்காசியாவின் ஜனநாயக புரட்சிகர சக்திகள் தங்களது நிலையை உணர்வார்கள் என்றும் ஏகாதிபத்திய எதிர்ப்பு சக்திகளின் பின் பலத்தை பெற்றுக்கொண்டு ஏகாதிபத்தியத்தை தோற்கடிப்பார்கள் என்றும் அப்பகுதிகளில் நியாயமான சமாதானத்தை நிலைநாட்டுவார்கள் எனவும் பொலிட்பீரோ நம்பிக்கை கொண்டுள்ளது.

### சிலி தியாகிகளுக்கு வீர வணக்கம்

சிலி இராணுவ ஆட்சியாளரின் கொலைக் குற்றங்களுக்கெல்லாம் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் ஆதரவு கொடுத்தும் தூண்டியும் வந்தார்கள், அதனால் தெம்புபெற்ற இராணுவ இரத்த வெறியர்கள் ஜனநாயக பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கத்தைக் கவிழ்த்தும், அந்த அரசாங்கத்தின் தலைவரைப் படுகொலை செய்தும் ஆட்சியைக்கைப் பற்றினர்கள்.

இராணுவ வெறியர்களால் படுகொலை செய்யப்பட்ட தோழர் அலெண்டே அவர்களுக்கு பொலிட்பீரோ வீரவணக்கம் செய்கிறது.

மற்றும் பாசிஸ்ட் நீசக்கும்பலின் கொலைவெறிக்குப் பலியாகி தலைசாய்ந்த பல்லாயிரக் கணக்கான வீர தீரர்களான தேசபக்தர்களுக்கும், பொலிட்பீரோ வீர வணக்கம் செலுத்துகிறது.

சிலி நாட்டின் கம்யூனிஸ்ட் கட்சி பொதுச் செயலாளர் தோழர் லூயி கார்வலன் அவர்களையும், அவரைபபோன்று பாசிஸ்ட் கொடுமைகளையும், சித்திரவதைகளையும் தாங்கி நிமிர்ந்து நிற்கும் தேசபக்த வீரர்களையும் பொலிட்பீரோ பாராட்டிப் போற்றுகிறது.

இந்தச் சித்திரவதைக் கொடுமைகளை உடனடியாக நிறுத்திட வேண்டுமென்றும் சிறைவைக்கப்பட்டுள்ள அனைவரையும் விடுதலை செய்துவிட வேண்டுமென்றும் பொலிட்பீரோ கோருகிறது.

மிருகத்தனமான இந்த பயங்கரத்துக்கு ஊடேயும் கூட, இந்த பாசிஸ்ட் ஆட்சியை எதிர்த்து சிலி நாட்டின் பல இடங்களிலும் போராட்டங்கள் நடந்து கொண்டிருப்பதைக் கண்டு பொலிட்பீரோ ஆறுதல் அடைகிறது.

போராட்டத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருக்கும் வீரமக்களை பொலிட்பீரோ பெருமையோடு பாராட்டுகிறது.

எத்தனை சோதனைகளும் துன்ப துயரங்களும் எதிர்ப்பட்டாலுங்கூட, இறுதியாக சிலிநாட்டின் தேசபக்தர்கள் வெற்றி பெற்றே தீருவார்கள் என்ற நம்பிக்கை பொலிட்பீரோவுக்கு உண்டு.

### தென்வியட்னும் புரட்சி அரசை உடனே அங்கீகரி

பாரிஸ் உடன்பாடு ஏற்பட்டிருந்தும்கூட அதையும் புறக்கணித்து விட்டு தென்வியட்னுமிய பொம்மை அரசுக்கு அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகள் ஆயுதங்களைப் பூட்டிய மணிபமாய் இருந்கிருர்கள்.

தென்வியட்நாமிய பொம்மை அரசு பாரிஸ் உடன்படிக்கையின் ஷரத்துக்களை அமுலாக்க மறுத்து லட்சக்கணக்கான அரசியல் கைதிகளை சிறையிலேயே அடைத்துவைத்திருக்கிருர்கள் ஜனநாயக உரிமைகளை வழங்க மறுக்கிருர்கள்; இரு தரப்பும் சமரசம் பேசவும் இயக்கம் காணவும் ஏற்படுத்தப்பட வேண்டிய கவுன்சில்களை, ஏற்படுத்த மறுக்கிருர்கள் தென்வியட்னும் புரட்சி அரசினுல் விடுதலை செய்யப்பட்ட பிரதேசங்களை ஆக்கிரமித்து வருகிருர்கள்.

இவ்வாறெல்லாம் அத்துமீறல்கள் நடத்தி, பாரிஸ் உடன்படிக்கைக்கு உலைவைக்கப் பார்க்கிருர்கள்.

பொம்மை ஆட்சியின் இத்தகைய ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளை எதிர்த்து தென்வியட்னுமிய புரட்சி அரசும், விடுவிக்கப்பட்ட பிரதேசங்களில் வாழும் மக்களும் முறியடித்து வருவதையும் பொலிட்பீரோ கவனிக்கிறது.

கடந்த கூட்டுச்சேரா நாடுகளின் மாநாட்டில், தென்வியட்னுமின் தற்காலிக புரட்சி அரசாங்கத்தை எல்லா நாடுகளும் அங்கீகரிக்க வேண்டுமென்று ஒரு மனதாக தீர்மானம் நிறைவேற்றப்பட்டதைக் கண்டு, பொலிட்பீரோ மனநிறைவு அடைகிறது.

இப்படி ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருந்தும்கூட — அந்தத் தீர்மானத்தை ஏற்றுக்கொண்ட ஒரு நாடாக இந்தியாவும் இருந்தும்கூட — அந்த புரட்சி அரசாங்கத்தை இன்னும் இந்தியா அங்கீகரிக்க மறுத்தே வருகிறது.

அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் மனதைப் புண்படுத்திவிடக்கூடாதே என்பதற்காக மட்டுமே இந்தியா இவ்வாறு நடந்துகொண்டிருக்க முடியும்.

கூட்டுச் சேரா நாடுகளின் மாநாட்டின் தீர்மானத்துக்கு இந்திய சர்க்கார் மதிப்பு கொடுக்க வேண்டுமென்றும், உடனடியாக புரட்சி அரசாங்கத்தை அங்கீகரிக்க வேண்டுமென்றும் இந்திய அரசாங்கத்தை பொலிட்பீரோ வற்புறுத்துகிறது.

### கம்போடியா, வடகொரியா

சிஹானுக்கைத் தலைமையாகக் கொண்ட அரசாங்கத்தையே கம்போடியாவின் சட்ட பூர்வமான அரசாங்கம் என இந்திய அரசாங்கம் உடனடியாக அங்கீகரிக்க வேண்டுமென்றும், இது போன்ற ஓர் தீர்மானம் ஐக்கியநாடுகள் சபை முன்னுல் வர விருப்பதால், அத்தீர்மானத்துக்கு இந்தியா ஆதரவு தர வேண்டுமென்றும் பொலிட்பீரோ கோருகிறது.

மேலும், வடகொரியாவுடன் தூதுவர் மட்டத்தில் ராஜதந்திர உறவுகளை உயர்த்திக் கொள்ள வேண்டுமென்றும் பொலிட்பீரோ இந்திய அரசைக் கோருகிறது

### அமெரிக்க ஏகாதிபத்தியமே பிரதான எதிரி

முன் கூறப்பட்ட வளர்ச்சிகளெல்லாம் ஒரு உண்மையைக் கோடிட்டுக் காட்டுகிறது அமெரிக்க ஏகாதிபத்தியமானது, சோஷலிஸ்ட் நாடுகளுடன் நட்புறவு ஒப்பந்தங்கள் செய்து கொண்டிருந்த போதிலும்கூட, அது விடுதலை இயக்கங்களுக்கும் மனிதகுலம் முழுமைக்கும் தொடர்ச்சியாக பிரதான எதிரியாகவே இருந்து வருகிறது விடுதலை இயக்கங்களை ஒடுக்குவதிலும், நவீன காலனி ஆதிக்கத்தைத் திணிப்பதிலும் அது தொடர்ந்து முனைந்து கொண்டிருக்கிறது.

ஆழமான பொருளாதார நெருக்கடி ஏற்பட்டிருந்தும்கூட— வியட்னும் மக்களிடம் செம்மையாக அடி வாங்கித் தோற்றுப் போயிருந்தும்கூட— லஞ்ச ஊழல்கள் காரணமாக அமெரிக்க நாடே அதிர்ந்துபோகும் அளவுக்கு சொந்த மக்கள் மத்தியிலேயே நிக்ஸன் நிர்வாகம் சிறுமைப்பட்டுக் கிடந்த போதிலுங்கூட— தேச விடுதலை இயக்கங்களை ஒடுக்கவும், நவீன காலனி ஆதிக்கத்தைத் திணிக்கவும் தொடர்ந்து அமெரிக்க ஏகாதிபத்தியத்தினுல் முடிகின்றது என்ருல், அதற்குக் காரணம் என்ன?

சோஷலிஸ முகாமில் ஏற்பட்டுள்ள பிளவையும், சோவியத்யூனியனுக்கும் சீனுவுக்குமிடையே ஏற்பட்டுள்ள ஒற்றுமைக் குலைவையும், அமெரிக்க ஏகாதிபத்தியம் பயன்படுத்திக்கொள்வதால்தான் இந்தப் போக்கில் செல்லுவதற்கு அதனுல் முடிகிறது.

இப்படிப்பட்ட நிலைமையில், சோவியத் தலைவர்களுக்கும், சீனத் தலைவர்களுக்கும் பொலிட்பீரோ மீண்டும் விண்ணப்பித்துக் கொள்ளுவது இதுதான்:

சோவியத் யூனியனுக்கும், சீனுத்துக்குமிடையே ஒற்றுமை ஏற்படுத்த வேண்டுமென்றும் அமெரிக்க ஏகாதிபத்தியத்துக்கு தோல்வி மேல் தோல்வி கிடைக்கத்தக்க வகையில் உதவி புரியுமாறும் பொலிட்பீரோ விண்ணப்பித்துக் கொள்ளுகிறது.

### உள்நாட்டு நிலைமை

இனி உள்நாட்டு நிலைமை பற்றி பரிசீலிப்போம். உள்நாட்டு நிலைமை எப்படி இருக்கிறது?

அதிர்ச்சியடையத்தக்கவாறு நாட்டு மக்கள் பயன்படுத்தும் பண்டங்களின் விலைவாசிகள் அனைத்தும் வானம்போல் உயர்ந்துகொண்டே போகின்றன

அநேக அத்தியாவசியப்பொருள்கள் மார்க்கெட்டிலிருந்தே மறைந்து போய்விட்டன. விலைவாசி உயர்வை தடுத்து நிறுத்திட, எந்தவிதமான பலன்தரத்தக்க நடவடிக்கையையும் எடுப்பதில் அரசாங்கம் தவறிவிட்டது,

### விலைவாசி உயர்வுக்கு அரசாங்கம் உடந்தை

மறுபுறமோ, உணவு தானியங்களின் கொள்முதல் விலையை உயர்த்திக் கொடுக்க வேண்டுமென்று நிலப்பிரபுக்கள் வைத்த கோரிக்கைக்கு சர்க்கார் விட்டுக்கொடுத்தது. அதைவிட படுமோசம் இன்னென்று உண்டு. அது என்னவென்ருல், புதிய அறுவடை ஆவதற்கு இன்னும் காலம் இருக்கும் போதே, கொள்முதல் வேலைகள் துவங்கவும் இன்னும் கூடுதல் அவகாசம் இருக்கும்போதே, அரசாங்கமானது அரிசி விலையையும் இதர தானியங்களின் விற்பனை விலையையும் 25 முதல் 30 சதமானம் வரை அதிகரித்து நிர்ணயம் செய்துள்ளது. இத்துடன் போக்குவரத்துச் செலவையும் இதர செலவுகளையும நிர்ணயித்துள்ளது இதர பொருள்களின் விலைவாசிகளும ஒன்றைப்பார்த்து ஒன்று ஏறிய மணியமாக இருக்கின்றது. சாதாரண மக்கள்படும் கொடுந்துன்ப துயரங்களைப் பற்றி கொஞ்சமும் கவலைப்படாத சொரணைகெட்ட அரசாங்கத்தை பொலிட்பீரோ வன்மையாகக் கண்டிக்கிறது.

### துன்பம் ஒருபுறம் லாபமலை மறுபுறம்

கடந்த இரண்டு ஆண்டுகளாக விலைவாசிகள் மேலும் மேலும் உயர்ந்து கொண்டே வந்ததின் விளைவாக, மக்களுக்கு ஏற்பட்டுள்ள துன்ப துயரங்கள் குவிந்து கிடக்கும் போது — மின்வெட்டு காரணமாகவும், மற்றும் பல பொருள்களின் பற்ருக்குறை காரணமாகவும். ஆலைகள் பலவும் முழுமையாகவும், அரைகுறையாகவும் மூடப்பட்டு வெகுஜன வேலையில்லாத் திண்டாட்டம் பூதாகாரமான அளவுக்கு எட்டிவிட்ட சமயத்தில்— தொழில் அதிபர் குடும்பங்களோ இதற்கு முன் கண்டிராத அளவுக்கு மிக உயர்ந்த லாபத்தை அடைந்தார்கள்; பெருந்தொழில் கம்பெனிகளின் பணப்பைகளோ முன்னெப்போதும் பார்த்திராத அளவுக்கு பெருத்து விட்டன,

இதிலிருந்தே, இந்த மக்களின் விரோதிகள், சாதாரண மக்களை எப்படி கசக்கிப் பிழிந்து சுரண்டி இருக்கிருர்கள் என்பதும்—எப்படிச் சூறையாடியிருக்கிருர்கள் என்பதும் நன்கு வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறது.

ஆயினும், சோஷலிஸத்தைப்பற்றி வாய்வீச்சடிக்கும் அரசாங்கமானது, அன்னிய முதலாளிகள், இந்திய முதலாளிகள், கூட்டு முதலாளிகள் ஆகியோரின் ஈவிரக்கமற்ற கொள்ளை லாபத்தின்மீது கை வைக்க மறுக்கிறது.

மத்திய மந்திரி சபையின் அரசியல் விவகாரக் கமிட்டியினர் 6 பொருளாதார நிபுணர்களுடன் கூடி விவாதித்தனர். பிரதம மந்திரியும் ஜே ஆர் டி டாட்டாவுடனும் ஜி டி பிர்லாவுடனும் கலந்து விவாதித்தார்.

விவாதித்த பிற்பாடு, புவனேஸ்வரில் ஒரு அறிக்கை விட்டார். எல் கே ஜாவும், பி கே நேருவும், பி. என். தாருவும் சேர்ந்து தயாரித்த அறிக்கையில் கண்டுள்ள கொள்கையை பரிபூரணமாக மந்திரிசபை இன்னும் பரிசீலித்துக் கொண்டிருப்பதாக பிரதமர் கூறினர் என்பதாக இந்துஸ்தான் டைம்ஸ் அக்

(4—ம் பக்கம் பார்க்க)

குமரி போக்குவரத்துத் தொழிலாளர் போராட்டம்

### உண்ணுவிரதமிருந்த தோழர் ஹேமச்சந்திரன் கைது

நாகர்கோவில், நவ. 6—

**25 சதவித போனஸ் உட்பட பலகோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்து வரும் குமரி மாவட்ட அரசுப்போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கு ஆதரவாக மாவட்ட சி.ஐ டி யூ தலைவர் தோழர் ஜே. ஹேமச்சந்திரன் இன்று 4-வது நாளாக உண்ணுவிரதமிருக்கையில் காலை 10 மணி அளவில் கைது செய்யப்பட்டுள்ளார்.**

வேலை நிறுத்தம் செய்துள்ள போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கும், மில் தொழிலாளர்க்கும், தோழர் ஹேமச்சந்திரன் உண்ணுவிரதத்துக்கும் ஆதரவு தெரிவித்து நேற்று நாகர்கோவில் நகரில் நடந்த மாபெரும் ஊர்வலத்தில் ஆயிரக்கணக்கான தோட்டத் தொழிலாளர்களும் மில் தொழிலாளர்களும் கலந்து கொண்டனா.

குமரி மாவட்டத்திலுள்ள அனைத்து ரப்பர் தேயிலைத் தோட்டங்களைச் சேர்ந்த 8000 தொழிலாளர்கள் நேற்று ஆதரவு வேலைநிறுத்தம் செய்து லாரிகளில் நாகர்கோவில் ஊர்வலத்தில் கலந்து கொள்ள திரள் திரளாக வந்தனர்.

ஊர்வலத்தினர், போக்குவரத்துத் தொழிலாளர் கோரிக்கைகளை நிறைவேற்றக் கோரியும் போலீஸ் அடக்கு முறைக்குக் கண்டனம் தெரிவித்தும் தோழர் ஹேமசந்திரன் உயிருக்கு ஆபத்து ஏற்படுத்தக்கூடாது என்றும் வான்முட்ட கோஷம் முழங்கினர், நகரெங்கும் ஒரே சிவப்புமயமாகக் காணப்பட்டது ஊர்வலத்தில் ஏராளமான பெண் தொழிலாளர்களும் கலந்து கொண்டனர்.

ஊர்வலம் நகரைச்சுற்றி விட்டு கலெக்டர் ஆபீஸ் சென்றது. கலெக்டரிடம் தொழிலாளர் கோரிக்கைகளை நிறைவேற்றக்கோரும் மகஜர் ஒன்று அளிக்கப்பட்டது.

ஊர்வலம் தோழர் ஹேமச்சந்திரன் உண்ணுவிரதப் பந்தலுக்கு செல்வதற்குப் போலீசார் அனுமதிக்கவில்லை. தடையை மீறி தங்கள் தலைவரைப் பார்க்கச் சென்ற ஊர்வலத்தில்வந்த 8 தொழிலாளர்களை போலீசார் கைது செய்து காவலில் வைத்துள்ளனர் இன்றும் தடையைமீறி தோழர் ஹேமச்சந்திரனைப் பார்க்கச் சென்ற 4 தோழர்கள் கைது செய்யப்பட்டார்கள்.

போலீசாரால் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கும் ஹேமசந்திரன் தொடர்ந்து உண்ணுவிரதமிருக்கிருர்.

அரசுப போக்குவரத்துத் தொழிலாளர் வேலை நிறுத்தம் இன்று 22-வது நாளாக நடந்தது,

**வேலை நிறுத்தம்**

ஆரல்வாய்மொழி கன்யாஸ்பின் மில் தொழிலாளர் வேலை நிறுத்தம் இன்று 17-வது நாளாக நடைபெற்றது

குமரி மாவட்டத்தில்வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கு ஆதரவு தெரிவித்தும், அவர்களது கோரிக்கையை நிறைவேற்றக்கோரியும் உத்தமபாளையத்தில் கூடிய மதுரை மாவட்ட இந்திய மாணவர் சங்க சிறப்பு மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மேற்கு வங்க பந்த்

### 17-ம் தேதி சிஐடியூ முடிவு வலது கம்யூனிஸ்ட் திண்டாட்டம்

கல்கத்தா, நவ. 7—

நவம்பர் 19 அன்று நடத்த விருந்த மேற்கு வங்க 'பந்த்' நவம்பர் 17-ம் தேதி நடத்த சி ஐ டி யூ முடிவெடுத்துள்ளது.

'பந்த்'ஐ இடதுசாரி தொழிற்சங்கங்கள் கூட்டாக நடத்தவேண்டுமென்ற சி ஐ டி யூ வின் அறைகூவலை புறக்கணித்துவிட்டு வலது கம்யூனிஸ்ட் ஏ ஐ டி யூ சி, காங்கிரசுடன் சேர்ந்து 17-ம் தேதி நடத்த முடிவெடுத்துவிட்டு, சிஐடியூ தான் தொழிற்சங்க ஒற்றுமையை குலைப்பதாக பிரச்சாரம் செய்து வந்தது.

தற்சமயம் சி ஐ டி யூ 'பந்த்' தேதியை 17-ம் தேதிக்கு மாற்றியுள்ளதால் வலது கம்யூனிஸ்டுகள் வாய் திறக்க முடியாத நிலைக்கு தள்ளப்பட்டுள்ளார்கள்.

# தீக்கதிர்

## அந்நிய எண்ணெய் கம்பெனிகளுக்கு சலுகை ஏன்?

பெட்ரோல் விலையையும், மண்ணெண்ணெய்விலையையும் ஒரேயடியாக உயர்த்தியிருப்பதின்விளைவாக ஏற்கனவே நாட்டையே அலைக்கழித்துக்கொண்டிருக்கும் விலையேற்றம் மேலும் ஏறத்தொடங்கியுள்ளது.

பெட்ரோல் விலையை உயர்த்தியிருப்பதற்கு அரசாங்கம் கூறும் காரணம் கச்சா எண்ணெயின் விலையை எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகள் உயர்த்தியுள்ளன என்பதேயாகும். எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகள் உயர்த்தியிருக்கும் விலைக்கும் இந்திய அரசாங்கம் நிர்ணயித்திருக்கும் விலைக்கும் இடையேயுள்ள வித்தியாசத்தைப்பார்த்தால் கச்சா எண்ணெய் விலை அதிகரிப்புக்காக மட்டும் இந்திய அரசு எக்சைஸ்வரியை உயர்த்தவில்லை என்பது தெளிவாகும். பெட்ரோல் மீதும் மண்ணெண்ணை மீதும் எக்சைஸ் வரி அதிகரிப்பால் போக்குவரத்து வாகனங்களை இயக்குவதற்கான செலவு அதிகரித்தும், ஏழை நடுத்தர மக்களின் வீட்டுச்செலவு அதிகரித்தும் தொழில் உற்பத்தியையே பாதித்தும் பெரும் நெருக்கடி ஏற்பட்டுள்ளது.

இத்தகைய நெருக்கடியைத் தவிர்ப்பதற்கான வழியை இந்திய அரசாங்கம் பின்பற்றவில்லை.

அந்நிய எண்ணெய்க் கம்பெனிகள் நம் நாட்டைக் கொள்ளையடித்து அந்தக் கொள்ளையை தங்கு தடையின்றி தங்களுடைய நாடுகளுக்கு எடுத்துச் சென்று கொண்டிருக்கின்றன.

ஸ்ரீலங்கா, எகிப்து போன்ற சிறிய நாடுகள் கூட அந்நிய நிறுவனங்கள் லாபத் தொகையைத் தங்கு தடையின்றி எடுத்துச் செல்வதற்குத்தடை விதித்திருக்கும்போது இந்திய அரசாங்கம் இத்தகைய நடவடிக்கையை எடுப்பதற்குக்கூட திராணியற்றிருக்கிறது. அந்நிய எண்ணெய்க் கம்பெனிகளுடன் இந்திய அரசாங்கம் செய்து கொண்டிருக்கும் ஒப்பந்தப்படி லாபத்தொகையை இந்தக் கம்பெனிகள் தங்களுடைய நாடுகளுக்குத் தங்கு தடையின்றி அனுப்ப அனுமதியளிக்கப்பட்டிருக்கிறது.

அந்நிய எண்ணெய்க் கம்பெனிகள் இறக்குமதி செய்யும் கச்சா எண்ணெய்க்கு இஷ்டம்போல் விலையை உயர்த்தி லாபத்தைப் பெருக்கிக் கொண்டுவந்த போதெல்லாம் இந்திய அரசாங்கம் விட்டுக் கொடுத்துக்கொண்டே வந்துள்ளது.

கச்சா எண்ணெய்க்கு விலையை உயர்த்தும் எண்ணெய்க் கம்பெனிகளுக்கு எதிராக அந்தக் கம்பெனிகளை நாட்டுடைமையாக்கும் நடவடிக்கையை எடுக்க இந்திய அரசு துணியவில்லை.

அந்நிய முதலாளிகளுக்கு மேலும் மேலும் சலுகையளித்து இந்திய நாட்டில் அந்நிய மூலதன ஊடுருவலுக்குக் கதவைத் திறந்து விடும் கொள்கையைப் பின்பற்றும் இந்திய அரசாங்கம் எங்ஙனம் எண்ணெய்க் கம்பெனிகளை நாட்டுடைமையாக்க முடியும்?

அந்நிய எண்ணெய்க்கம்பெனிகளின் கொள்ளைக்கு நாட்டில் எதிர்ப்பு வலுத்துக் கொண்டு வந்த நிலையில் அமெரிக்க எண்ணெய்க் கம்பெனியான 'எஸ்ஸோ' கம்பெனி நிர்வாகத்தை இந்திய அரசிடம் ஒப்படைப்பதாக அறிவித்தது. "எஸ்ஸோ" கம்பெனியின் சொத்தில் 75 சதவிகிதத்தை விற்று கம்பெனியில் இந்திய அரசாங்கம் 75 சதவீத பங்குகளை வைத்திருக்க விடுவதாகவும் அது அறிவித்துள்ளது.

இந்நிலையில் எஸ்ஸோ கம்பெனியை நாட்டுடைமையாக்கி அதற்கு ஓரளவு நஷ்ட ஈட்டுத்தொகையைக்கொடுப்பதற்கும் பதில் மார்க்கெட் விலையில் நஷ்ட ஈடு கொடுப்பதாக இந்திய அரசு அறிவித்துள்ளது.

எஸ்ஸோ கம்பெனி தன்னுடைய சொத்தின் மதிப்பு ரூ 40 கோடி என்று கூறுகிறது. இந்திரா அரசு பேரம்பேசி ரூ 17 கோடியைத் தாரை வார்க்க முன்வந்துள்ளது. இத்தனை வருடங்களாக அடித்த கொள்ளை போதாது என்று கொழுத்த நஷ்ட ஈடு கொடுப்பதுடன் தொடர்ந்து கச்சா எண்ணெய் இறக்குமதி செய்வதில் இந்தக் கம்பெனிக்குச் சலுகை அளிக்கவும் பேரம் செய்யப்படுகிறது.

ஓரளவு நஷ்ட ஈடு கொடுத்து மூன்று அந்நிய எண்ணெய்க் கம்பெனிகளையும் நாட்டுடைமையாக்கியும் அந்நிய எண்ணெய்க் கம்பெனிகள் இந்தியாவுக்காக வாங்கும் கச்சா எண்ணெயை சொந்த நாடுகளுக்குத் திருப்பிவிடுவதைத் தடுத்தும் தற்போது ஏற்பட்டிருக்கும் நெருக்கடியைத் தவிர்த்திருக்க முடியும்.

அவ்வாறு செய்வதற்குப் பதில் அந்நிய எண்ணெய் கம்பெனிகளுக்குத் தொடர்ந்து சலுகை அளித்தும் எண்ணெய் மீது எக்சைஸ் வரியைக் கூட்டியும் மக்களைத் தாக்கும் பாதையிலேயே இந்திய அரசு சென்றுள்ளது.

---

### மேற்கு வங்கத்தில்

## சணல் தொழிலாளர்கள் அடையாள வேலைநிறுத்தம்

கல்கத்தா, நவ, 6—

மேற்குவங்க மாநிலம் முழுவதும் உள்ள 2 லட்சத்து 50 ஆயிரம் சணல் தொழிற்சாலைத் தொழிலாளர்கள் தங்கள் 14 அம்சக் கோரிக்கைகளை வலியுறுத்தி கடந்த ஞாயிற்றுக்கிழமை அடையாள வேலைநிறுத்தம் செய்தனர்.

விவசாயிகளிடமிருந்து வாங்கும் சணலுக்கு மாண்டுக்கு ரூ 75-80 விலை என நிர்ணயிக்கப்பட வேண்டும் சணல் பொருட்களை ஏற்றுமதி செய்தல் உட்பட சணல் தொழில் முழுவதையும் தேசியமயமாக்க வேண்டும் போன்ற 14 அம்சக் கோரிக்கைகளை வலியுறுத்தியே அடையாள வேலைநிறுத்தம் மேற்கொண்டுள்ளனர்.

இப்போராட்டத்திற்கு சி ஐ டி யூ. ஏ ஐ டி யூ சி, ஐ என் டி யூ சி ஆகிய சங்கங்கள் அனைத்தும் ...

---

"போராட்டமில்லையேல் சம்பள உயர்வு இல்லை"

# கோவை - சேலம் பஞ்சாலைத் தொழிலாளர் மாநாட்டில் கே. ரமணி முழக்கம்

கோவை, நவ, 5—

**ஒன்றுபட்ட போராட்டம் இல்லையேல் சம்பள உயர்வு என்ற பேச்சுக்கே இடமில்லை என்று இங்குநடந்த கோவை-சேலம் மாவட்ட பஞ்சாலைத் தொழிலாளர் பிரதிநிதிகள் மாநாட்டில் பேசிய தமிழக சிஐடியூ தலைவர் தோழர் கே. ரமணி குறிப்பிட்டார். அவர் மேலும் கூறியதாவது:-**



நம் நாட்டில் பஞ்சாலைத் தொழிலில் ஏற்பட்டு 100 வருடங்களாகிறது. இந்தக் காலத்தில் பஞ்சாலைத் தொழிலில் குறிப்பிடத்தக்க அளவிற்கு பெரிய அளவில் வளர்ந்து உள்ளது. இந்தத் தொழிலில் நியாய ஊதியக் கமிட்டி வரையறுத்துள்ள நியாயச் சம்பளம்தான் கொடுக்க வேண்டும். ஆனால் பஞ்சாலை முதலாளிகள் குறைந்த பட்ச சம்பளமாவது கொடுக்க மறுக்கின்றனர். எல்லாத் தொழிலாளர்களுக்கும் தேவைக்கேற்ற குறைந்தபட்சச் சம்பளம் கொடுக்கவேண்டுமென்று முழக்கமிட்ட நேரு காலத்திலும் சரி வறுமையை ஒழிப்போம் என்ற வெற்று வாய்ச்சவடால் அடிக்கும் இந்திரா காலத்திலும் சரி, தேவைக்கேற்ற குறைந்த பட்சச் சம்பளம் கொடுக்க முதலாளிகளை நிர்பந்திக்காமல், அவர்களுக்கு எல்லாவிதப் பாதுகாப்பும் அளித்துவருகிறது குறைந்த பட்சச் சம்பளம் கொடுக்க முடியாததொழிலே இருக்கக் கூடாதென்று சுப்ரீம்கோர்ட் கூடத் தீர்ப்புக் கொடுத்துள்ளது. ஆனால் அரசும் முதலாளிகளும் அதை மதிக்காமல் மீறுகின்றனர்.

நாடு தற்போது தான் சுதந்திரம் அடைந்துள்ளது. உற்பத்தி பெருகினால் தான் நாடு முன்னேற முடியும் என்றும், உற்பத்தி பெருக தொழிலாளர்கள் கடுமையாக உழைக்க வேண்டுமென்றும் கூறிக் கொண்டே, மத்திய மாநில அரசுகள், குறைந்தபட்சச் சம்பளம் கொடுக்க மறுத்து வருகின்றனர். தொழிலாளி ஒரு சாதாரண வாழ்க்கை நடத்த உயிருடன் இருப்பதற்கே கேட்பதுதான் குறைந்த பட்சச் சம்பளம். ஆனால் இதற்கே தொழிலாளிகள் போராட வேண்டியுள்ளது. தேவை அடிப்படையிலான குறைந்தபட்ச சம்பளக் கோரிக்கையை முதன் முதலில் மத்திய அரசு ஊழியர்கள் முன்வைத்தனர். 1939-ல் பஞ்சாலைத் தொழிலாளிகள் சம்பள உயர்வு கேட்டனர்.

வெங்கட்ராமையா விசாரணைக் கமிட்டி ரூ. 37 கொடுக்கவேண்டியது நியாயமானது என்று கூறிவிட்டு ரூ.26 கொடுத்தால் போதும் என்று குறைத்ததற்கான எவ்விதக் காரணத்தையும் கூறாமல், ஒருதலைப் பட்சமாக தீர்ப்புக் கூறினர். 56, 62 ஆகிய வருடங்களில் கிடைத்த சம்பள உயர்வும் உண்மையானதல்ல. வேலைப்பளுவை உயர்த்தியதால்தான் இந்தச் சம்பள உயர்வும் கிடைத்தது, 72-ம் ஆண்டில் ஏற்பட்ட ஒப்பந்தப்படி அமைக்கப்பட்டுள்ள சம்பளக் கமிட்டியினால் எவ்விதப் பயனும் ஏற்படப்போவதில்லை. 72-ல் அமைக்கப்பட்டது ஒரு சமரசக் கமிட்டிதான். இது சம்பள உயர்வு விஷயத்தில் தீர்ப்புக்கூற இக்கமிட்டிக்கு அதிகாரம் கிடையாது. ஆகவே, பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு சம்பள உயர்வு கிடைக்க வேண்டுமானால், மீண்டும் ஒரு மாபெரும் போராட்டம் நடத்தினால்தான் முடியும்.

பஞ்சாலைத் தொழிலாளிகளைவிட, சிமிண்ட், பாய்லர், டெலிம்பிரிண்டர்ஸ், விஸ்கோஸ் உருக்குத் தொழில்களில் வேலை செய்யும் தொழிலாளிகள் செய்யும் தொழிலாளிகள் போராடி ரூ 300க்கு மேல் சம்பள உயர்வு பெற்றுள்ளனர்.

ஆனால் பஞ்சாலைத் தொழிலாளி மட்டும் ரூ 275 தான் பெறுகிறார்கள், ஆகவே போராடாமல் சம்பள உயர்வு கிடைக்காது என்பதுதான் நமது அனுபவம். சமீபத்தில் பதினைந்து நாட்களுக்கு முன் ஏற்பட்ட குறைந்தபட்ச போனஸ் 11,33 என்றும் உயர்ந்தபட்சம் 25% என்று ஒப்பந்தங்கூட, போராட்டத்திற்கு தயார் ஆன பிற்பாடுதான் ஏற்பட்டுள்ளது. இந்தத் தொழிலில் தேவை அடிப்படையிலான குறைந்தபட்சச் சம்பளம் கொடுக்கக் கூடிய நிலை உள்ளது. நாம் குறைந்தபட்சச் சம்பளக் கோரிக்கை வைக்கும் போது, நாட்டில் 30% மக்கள் மாதம் ரூ 22 வருமானம் பெற்று வாழ்கின்றனர் என்றும், பஞ்சாலைத் தொழிலாளிகள் ஸ்தாபன ரீதியில் திரண்டு போராடுவதால் அதிகச் சம்பளம் பெறுகின்றனர் என்றும், ஆகவே இனி சம்பள உயர்வு இல்லை, சம்பள முடக்கம் செய்ய செய்யவேண்டும் என்றும் முதலாளிகள் கூறுகின்றனர் அரசும் அம்மாதிரியே கூறுகிறது.

ஆனால், வாழ்க்கைத் தரத்தின் அடிமட்டத்தில் உள்ளவர்கள் சம்பள உயர்வு கோரினால், அதை ஒடுக்க மத்திய — மாநில அரசுகள் தனது பலாத்காரத்தின் மூலமும், அதிகாரத்தின் மூலமும், அடக்கி ஒடுக்கி விடுகின்றனர். தன்னுடைய ஊதிய முடக்கக் கொள்கையை அமுல் நடத்த ஐ என் டி யூ சி, ஏ ஐ டி யூ சி, எச் எம் எஸ் போன்ற பிற்போக்குத் தொழிற் சங்கத்தினரைப் பயன்படுத்துகின்றனர்.

ஆகவே, பஞ்சாலைத் தொழிலில் உள்ள அனைத்து தொழிலாளர்களையும் ஒன்று திரட்டி, குறைந்தபட்ச ஊதியமாக ரூ 395.50 பெற சகல நேரடி நடவடிக்கைக்கும் தயார் செய்ய இம்மாநாடு வழிகாட்ட வேண்டும் என்று கூறினர்.

மாநாட்டில்நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை இத்துடன் இணைத்துள்ளோம்.

### தீர்மானங்கள்

**தேவை அடிப்படையிலான குறைந்தபட்ச சம்பளம்**

பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு கடந்த 12 ஆண்டுகளாக சம்பள உயர்வு என்பதே கிடைக்கவில்லை, எந்தத் தொழிலிலும் இல்லாத அளவுக்கு பஞ்சாலைத் தொழிலில் வேலைப் பளு உயர்வு சுமத்தப்பட்டுள்ளது. நாட்டில்விலைவாசிகள் தொடர்ந்து உயர்ந்து கொண்டே போய்க்கொண்டிருக்கிறது.

இந்த விலைவாசிக்கேற்ப பஞ்சப்படியும் முழு அளவு கூட்டித் தரப்படவில்லை. பஞ்சாலைத் தொழிலாளர்களின் உண்மைச் சம்பளம் வீழ்ச்சி அடைந்துள்ளது. விலைவாசிகள் குறையும் அல்லது கட்டுப்படுத்தப்படும் என்பதற்கான எவ்வித உத்திரவாதமும் இல்லை. உயரத்தான் செய்யும் என்பதால் சர்க்கார் கடைப்பிடிக்கும் கொள்கையிலிருந்து தெளிவாகிறது. எனவே, பஞ்சாலைத் தொழிலாளர்களுக்குத் தேவை அடிப்படையிலான குறைந்த பட்சச் சம்பளமாக ரூ. 389-50 கிடைக்க பஞ்சாலைத் தொழிலாளர்களின் ஒற்றுமையைக் கட்டிபொது வேலை நிறுத்தம் உட்பட சகல நடவடிக்கைகளையும் எடுக்க இம்மாநாடு ஏகமனதாக முடிவு செய்கிறது.

தேவைக்கேற்ற இக்குறைந்தபட்ச சம்பளக் கோரிக்கையை அடைய பொதுவேலை நிறுத்தத்திற்கு தயாராகுமாறு இம்மாநாடு சகல பஞ்சாலைத் தொழிலாளர்களையும் அறைகூவி அழைக்கிறது.

**வேலைப் பாதுகாப்பு**

பஞ்சாலைகளில் நிரந்தரத் தொழிலாளர்கள், பதிலி, டெம்பரரி, கேஷ்வல், அப்ரன்டிஸ், லேபர்ஸ், ட்ரெயினீஸ் என பல பிரிவுகளாகப் பிரித்துவைத்து பல ஆண்டுகளாக வேலை வாங்கி வருகிறார்கள். கடந்த ஆண்டு இப்பிரச்னைக்காகப் பொது வேலை நிறுத்தம் நடந்து ஒரு உடன்பாடு ஏற்பட்டும், இந்தத் தொழிலாளர்களின் சம்பளத்திற்கும், வேலை பாதுகாப்பிற்கும் உத்திரவாதம் ஏற்படவில்லை, தீர்வும் ஏற்படவில்லை.

ஒரு ஆண்டு சர்வீஸ் பூர்த்தியான பதிலி, டெம்பரரி, அப்ரன்டிஸ், கேஷ்வல் முதலிய சகல தொழிலாளர்களையும், எந்த வேலை அந்தஸ்திலிருந்தாலும் அவர்களை நிரந்தரம் ஆக்கவும் செய்யும் வேலைக்குரிய சம்பளத்தைக் கொடுக்கவும் வேண்டும் என்பதற்காக ஒன்றுபட்ட இயக்கத்தை நடத்துமாறும், தேவையானால் மீண்டுமொரு போராட்டத்திற்கு தயாராகுமாறும் பஞ்சாலைத் தொழிலாளர்களை இம்மாநாடு அறைகூவி அழைக்கிறது.

**போக்குவரத்து ஊழியர்கள் போராட்டத்திற்கு ஆதரவு**

கடந்த 15—10—73-ம் தேதி முதல் நியாயமான போனஸ் கோரியும், பழிவாங்கலை எதிர்த்தும் வேலை நிறுத்தப் போராட்டம் நடத்தி வருகின்றனர். தமிழ்நாடு அரசு இந்தத் தொழிலாளர்களின் நியாயமான இக்கோரிக்கைகளைப் பற்றி சங்கத் தலைவர்களுடன் கலந்து பேசி முடிப்பதற்கு பதில் 100-க்கு மேற்பட்ட தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்தும், 200-க்கு மேற்பட்டவர்களைக் கைது செய்து சிறையில் அடைத்தும், திமுகவின் சில நபர்களை வைத்து போலீஸ் அடக்குமுறையின் மூலமும் போராட்டத்தை அடக்கவும் நசுக்கவும் தமிழக அரசு எடுத்துவரும் ஜனநாயக விரோத, தொழிலாளர் விரோத நடவடிக்கைகளை இம்மாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது. அடக்குமுறை நடவடிக்கைகளை கைவிட்டுக் கோரிக்கைகளைப்பற்றி சங்கத் தலைமையுடன் சுமுகமாகப் பேசி முடிக்க தமிழக அரசு உடனடியாக நடவடிக்கை எடுக்குமாறு இம்மாநாடு கோருகிறது.

அரசும் போக்குவரத்து ஊழியர்களின் நியாயமான இக்கோரிக்கைகளுக்கும் போராட்டத்திற்கும் பஞ்சாலைத் தொழிலாளர்களின் முழு ஆதரவையும் ஒத்துழைப்பையும் இம்மாநாடு தெரிவித்துக்கொள்கிறது.

---

## ஆசிரியருக்கு...

### மழை காலங்களில்

## தாராபுரம் நகரின் அலங்கோலம்

ஐயா,

கடந்த 10 நாட்களுக்கு மேலாக தாராபுரம் நகரில் மழை பெய்ததின் காரணமாக நகரமே வியாதியின் பிறப்பிடமாக மாறியுள்ளது. ரோடுகளில் பன்றி மலங்கள் போட்டு பெரிய அளவுக்கு சுகாதாரக் கேட்டை உண்டு பண்ணி காலரா, வாந்தி பேதி போன்ற தொத்து வியாதிகள் பரவ வழி செய்கிறது.

இதை அப்புறப்படுத்தி சுத்தம் செய்ய நகராட்சி நிர்வாக அதிகாரிகள் எந்த வித நடவடிக்கையும் எடுப்பதில்லை. மழைகாலங்களில் பொது மக்கள் ரோடுகளில் நடக்கவே அருவருப்படைகிறார்கள்.

தாராபுரம் நகராட்சி பஸ் நிலையத்தின் அலங்கோலம் சொல்ல முடியாத அளவுக்கு முழுவதும் மேடும், பள்ளமும், குழியும், குண்டுமாக இருக்கிறது. மழை பெய்தால் இதில் தண்ணீர் தேங்கி, சேறும், சகதியும் உண்டாகி சுகாதாரக் கேட்டையும், அருவருப்பையும் உண்டாக்குகிறது. வெளியூர்க்காரர்கள் பஸ் நிலையத்தைப் பார்த்ததும் நகரவை நிர்வாகத்தின் லட்சணத்தைச் சொல்லாமலே புரிந்து கொள்வார்கள்.

... படுத்தி சுகாதாரக் கேட்டை தடுக்க வேண்டும் என்றும் பஸ்நிலையம் மேடு பள்ளங்களுக்கு குறைந்த பட்சம் சுண்ணாம்புச் சரளையாவது போட்டு சமப்படுத்த வேண்டும் என்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தாலுகா கமிட்டிச் செயலாளர் தோழர் டி ஆர் முத்துசாமி ஒரு மகஜரை நகரவை கமிஷனரிடம் சமர்ப்பித்தார். அவர் உடனடியாக நடவடிக்கை எடுப்பதாக கூறினார். வாய் அளவில் நடவடிக்கை எடுக்கிறோம் என்று கூறி நிலைமையைச் சரிக்கட்டவே இந்த அதிகாரிகள் இருக்கிறார்களோ என்று எண்ணத் தோன்றுகிறது.

ஆகவே சம்பந்தப்பட்ட நகராட்சி நிர்வாகமும், அதிகாரிகளும் உடனடியாக நடவடிக்கை எடுத்து பன்றி மலங்களை அவ்வப்போது அப்புறப்படுத்தவும் பஸ் நிலையத்தில் மேடு பள்ளங்களுக்கு சுண்ணாம்புச்சரளை போட்டு சமப்படுத்த ஆவன செய்வார்களா?

இப்படிக்கு

செயலாளர்

இந்திய கம்யூனிஸ்ட் மார்க்சிஸ்ட் கட்சி

தாராபுரம் தாலுகா கமிட்டி

---

போனசு ரெவியூவ் கமிட்டியில்

## சி.ஐ.டி.யூ.வின் யோசனையை ஏ.ஐ.டி.யூ.சி., எச்.எம்.எஸ். ஏற்றன

கான்பூர், நவ. 5—

ஒரு புதிய போனஸ் முறையை ஏற்படுத்துவதற்காக போனஸ் ஆய்வுக் கமிட்டி கூட்டப்பட்டது.

இதில் தொழிற்சங்கங்களின் பிரதிநிதிகளும், முதலாளிகளின் பிரதிநிதிகளும், அரசாங்க பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர்.

ஏற்கெனவே குறைந்த பட்ச போனசாக நிர்ணயிக்கப்பட்டுள்ள 8 33 சதவீத போனசுக்கு அதிகமாக இருக்க வேண்டுமென பெரும்பாலான தொழிற்சங்க பிரதிநிதிகளால் வலியுறுத்தப்பட்டன.

**10 சதவீத போனஸ்**

ஏ ஐ டி யூ சி யின் சார்பாக குறைந்த பட்ச போனஸ் 10 சதவீதமாக இருக்கவேண்டுமென கேட்கப்பட்டது.

பாரத் ஹெவி எலக்டிரிக்கல்ஸ் போன்ற சர்க்கார் துறை ஸ்தாபனங்கள், முதலில் ஏற்பட்டிருந்த மொத்த நஷ்டங்களை கழிக்காமலே தற்போதுள்ள குறைந்தபட்ச போனசைவிட அதிகமாக கொடுத்திருக்கின்றன. எனவே போனஸ் கொடுப்பதற்கு தொழில் ஸ்தாபனங்களுக்கு சக்தியில்லை என்ற கொள்கையே இருக்க முடியாது என எச் எம் எஸ்ஸின் பிரதிநிதி குறிப்பிட்டார்.

**8.33 சதவீதம் போதுமாம்**

ஐ என் டி யூ சி,யின் பிரதிநிதி, குறைந்தபட்ச போனஸ் 8,33 சதவீதம் போதுமென்றார். ஆனால், குறைந்த பட்ச போனசில் அளவு 80லிருந்து 200க்கு கூட்டப்பட வேண்டும். ஏனெனில் வாழ்க்கைச் செலவு அசாதாரணமான முறையில் கூடியுள்ளது என்றார்.

**சி.ஐ.டி.யூ.வின் யோசனை**

சி ஐ டி யூ சார்பாக கூறப்பட்ட யோசனையில் குறைந்தபட்ச போனசாக 10 சதவீதம் வேண்டும். ஆனால் இக் குறைந்தபட்ச போனஸ் ஒவ்வொரு வருடமும் ஒரு சதவீதம் வரை கூட்டப்பட வேண்டும் என்றது.

சி ஐ டி யூ வின் இந்த யோசனைக்கு ஏ ஐ டி யூ சியும், எச். எம். எஸ் ஸும் ஏற்றுக்கொண்டு ஆதரவளித்தன.

ஆனால், பொதுத்துறை பிரதிநிதிகள் இடைக்கால அறிக்கைகளில் குறைந்த பட்ச போனஸ்சம்பந்தமான எம்மாற்றத்தையும் ஏற்க மறுத்தனர்,

போனஸ்ரெவியூவ்கமிட்டி நவம்பர் 7 லிருந்து 9-ந் தேதி வரை கூடிப்பேசுவதென தீர்மானிக்கப்பட்டது.

---

### சிங்காநல்லூர் தொழிலாளர்கள்

## போனஸ் கோரி வேலை நிறுத்தம் உண்ணாவிரதம்

கோவை, நவ. 6—

கோவை சிங்கா நல்லூரிலுள்ள இந்தியன் ரெபரிஜிரேசன் இண்டஸ்ட்ரீஸ் மெசரால் இன்ஜினியரிங் ஆகிய இரு தொழிற்சாலைகளைச் சேர்ந்த தொழிலாளர்களும் நியாயமான போனஸ் கோரி கடந்த 19-ந் தேதி முதல் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

இப்போராட்டத்தை உடைக்க உரிமையாளர்கள் எவ்வளவோ பகீரத முயற்சிகள் செய்தும் இயலாமற் போகவே 2-11-73ந் தேதி முதல் சட்ட விரோதமாக கதவடைப்புச் செய்யப்பட்டது.

இந்த அநியாயத்தை எதிர்த்து உண்ணாவிரதம் இருக்க முடிவு செய்துள்ளனர்.

இந்த உண்ணாவிரதம் 7-ந் தேதியன்று, அவினாசி ரோட்டில் உள்ள தொழிற்சாலை உரிமையாளர் பங்களா முன்பும், மாவட்டக் கலெக்டர் அலுவலக முன்பும் நடக்கிறது.

நீலக் கோணாம்பாளையம், ஒண்டிப் புதூர் ஆகிய ஊர்களில் பொதுக் கூட்டங்கள் நடத்தவும் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

இப்போராட்டத்தை நடத்துவதற்கு, தொழிலாளர்கள், தாங்கள் அங்கம் வகிக்கும் நான்கு சங்கங்களின் பிரதிநிதிகள் அடங்கிய கூட்டுக் கமிட்டி அமைத்து அதன் வழிகாட்டுதலின் கீழ் செயல்பட்டு வருகின்றனர்.

---

# 11 அம்சக் கோரிக்கைகளுக்காக தென் மாநில பீடித்தொழிலாளர்கள் போராட்டம் நடத்த முடிவு

## போக்குவரத்து தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்துக்கு ஆதரவு

வேலூர், நவ. 6—

நவ. முதல் தேதியன்று தென் மாநிலங்களைச் சேர்ந்த பீடித்தொழிலாளர்கள் கமிட்டிக்கூட்டம்வேலூரில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் 11 முக்கியக் கோரிக்கைகளை வலியுறுத்தி ஈரவலாக பீடித்தொழிலாளர் போராட்டம் நடத்துவதென்று முடிவெடுக்கப்பட்டது. போராடும் குமரி மாவட்ட போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கும் இக்கூட்டத்தில் ஆதரவு தெரிவிக்கப்பட்டது.

இந்த கூட்டத்திற்கு தோழர் எஸ் சூரிய நாராயணராவ் தலைமை வகித்தார்.

தோழர் ஆர் உமாநாத் (தமிழக சி ஐ டி யூ செயலாளர்) தோழர் ஆர் ராமச்சந்திரராவ் (கர்நாடக சி ஐ டி யூ செயலாளர்), தோழர் பி வி குட்டி, (கேரளம்), வே கண்ணன் ஆகியோரும் இக்கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

போனஸ், சம்பள உயர்வு போன்ற கோரிக்கைகளுக்காக தென் மாநிலங்களில் பீடித்தொழிலாளர்கள் நடத்திய போராட்டங்கள் பற்றிய அறிக்கையை கமிட்டி செயலாளர் தோழர் சி, கண்ணன் தாக்கல் செய்தார்.

### செயலாளர் அறிக்கை

சென்ற மார்ச் 12-ம் தேதி லட்சக்கணக்கான பீடித்தொழிலாளர்கள் ஆயிரம் பீடிக்கு ரூ. 5—50 கூலிகோரி கமிட்டியின் அறைகூவலுக்கிணங்க அணிதிரண்டது பற்றியும் கர்நாடக பீடித் தொழிலாளர்கள் தங்களது போராட்டங்கள் வாயிலாக ரூ. 2—80 விருந்து ரூ. 4—30 ஆக கூலி உயர்வு பெற்றது பற்றியும், குறிப்பிடப்பட்டிருந்தது.

பீடித் தொழிலாளர்கள் பற்றிய சட்டத்திற்கு திருத்தம் கொண்டு வந்து அமல் படுத்த வேண்டுமென்று அறிக்கை மத்திய அரசைக் கேட்டுக் கொண்டுள்ளது.

கோரிக்கைகளை நிறைவேற்றுவதற்காக தொழிலாளர்களை அணி திரட்ட வேண்டியது பற்றி விவாதிக்க வேண்டுமென்றும் தோழர் சி. கண்ணன் கேட்டுக் கொண்டார்.

### கோரிக்கைகள்

அந்த அறிக்கை மீது விவாதம் நடத்தப்பட்டு கீழ்க்காணும் கோரிக்கைகளை முன் வைப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

1) தென் மாநிலங்களிலுள்ள பீடித் தொழிலாளர்களுக்கு ஆயிரம் பீடிக்கு ரூ. 5—50 அடிப்படைச் சம்பளமாகக் கொடுக்கப்பட வேண்டும்.

2) விலைவாசி உயர்வுக்கேற்ற பஞ்சப்படி வழங்க வேண்டும்.

3) சம்பளத்துடனே 9 பண்டிகை விடுமுறை வேண்டும்.

4) ஒவ்வொரு வாரத்துக்கும் சம்பளத்துடனே ஒரு விடுமுறை.

5) 8.33 சதவீத குறைந்த பட்ச போனஸ்

6) சம்பளத்துடனே 15 வருடாந்திர விடுமுறை,

7) ஆறு நாட்கள் வேலைக்கு உத்திரவாதம் அளிக்க வேண்டும். வேலை இல்லாத நாட்களுக்குச் சம்பளம் வழங்கப்பட வேண்டும்.

8) பெண் தொழிலாளர்களுக்கு 12 வார பிரசவ விடுமுறை அளிக்கப்பட வேண்டும்.

இந்த கோரிக்கைகளை பீடி நிர்வாகிகள் அமல்படுத்தத் தவறினுல் அரசு பீடித் தொழிலை தொழிலாளர்கள் கூட்டுறவு முறையில் நடத்துவதற்கான ஏற்பாடுகளை செய்து கொடுக்க வேண்டும்,

9) பீடி, சிகரெட் தொழிலாளர் சட்டத்தை திருத்தியமைத்து நாடெங்குமுள்ள 30 லட்சம் பீடித் தொழிலாளர்களை முதலாளிகளின் சுரண்டலிலிருந்து பாதுகாக்கவேண்டும்.

10) அரசு புகையிலைக்கு செஸ்வரி விதித்து அந்த வருவாய் மூலம் கிடைக்கும் தொகையைக் கொண்டு க்ஷயரோகத்தால் துயருறும் பீடித் தொழிலாளர்களுக்கு ஆஸ்பத்திரி கட்ட வேண்டும்.

11) கேரளத்தில் மது மரத் தொழிலாளர்களுக்கு கிடைத்துவருவது போன்று பீடித் தொழிலாளர்களுக்கும் சேமநல நிதி அமைத்து அதிலிருந்து ஓய்வுபெறும் பீடித் தொழிலாளர்களுக்கு ஓய்வுகால ஊதியம் அளிக்க வேண்டும்.

இந்த கோரிக்கைகளுக்காக தென்மாநில பீடித் தொழிலாளர் கமிட்டி டிசம்பர் முதல் தேதியிலிருந்து 10-ம் தேதி வரையிலும் 2 லட்சம் கையெழுத்து சேகரிக்க முடிவெடுத்தது.

டிசம்பர் 12-ந் தேதி தென் மாநிலங்களின் பிரதான பீடி மையங்களில் தொழிலாளர்கள் தங்கள் தங்கள் குடும்பத்தாருடன் ஊர்வலங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடத்தி கோரிக்கை மகஜர்களை மத்திய—மாநில அரசு அதிகாரிகளிடம் ஒப்படைப்பர்.

எதிர்கால நடவடிக்கைகள் பற்றி ஆராய 1974ஜனவரி 26, 27 தேதிகளில் பீடி தொழிலாளர்களின் சிறப்பு மாநாடு பாலக்காட்டில் (கேரளம்) நடைபெறும்.

மேலும் மத்திய அமைச்சர்களை சந்தித்து கோரிக்கை மகஜர் அளிப்பதற்கான தேதியும் முடிவெடுக்கப்படும்.

# சிங்கை ஹார்வி மில்லில் வேலைநிறுத்தம்

## கட்டாய மத்தியஸ்தத்திற்கு அனைத்து சங்க தொழிலாளர்கள் கடும் ஆட்சேபம்

சிங்கை, நவ. 5—

சிங்கை ஹார்வி மில்லில் 9 அம்சக் கோரிக்கைகளுக்காக கடந்த 22—10—73 முதல் தொடர்ந்து உள்ளிருப்பு வேலைநிறுத்தம்நடத்தி வரும் 6 ஆயிரம் தொழிலாளர்களை பட்டினி போட்டும் பணிய வைக்கலாமென மில் நிர்வாகம் திட்டமிட்டுள்ளது.

தொழிலாளர் துறையும் இதற்கு உடந்தையாக செயல்பட்டு வருகிறது. உதாரணமாக சமரசத்திற்கு வர மறுக்கும் மில் நிர்வாகததை வற்புறுததியும் கோரிக்கைகளைப்பற்றி இருதரப்பும் பேசி ஒரு முடிவுக்கு வர வற்புறுததுவதற்குத் தொழிலாளர் துறை தயாராக இல்லை.

போராட்டத்தின் காரணமாக 14 நாட்களாக தொழிலாளர்களின் குடும்பங்கள பட்டினி கிடப்பதாலும் சி ஐ டி யூ உப தலைவர் வாசுதேவன் உட்பட பலருக்கு சோகாஸ் நோட்டீஸ் கொடுக்கப்பட்டதாலும், 6000 தொழிலாளர்களுக்கும் 8 நாள் சம்பளம் பிடித்தம் என்று அறிவித்திருப்பதாலும் சிங்கை தொழிலாளர்கள் பணிந்து விடுவார்களென நினைத்து மில் நிர்வாகமும், தொழிலாளர் துறையும் சதிசெய்து 3—11—73ல் தொழிலாளர் பிரதிநிதிகளை மட்டும லேபர் ஆபீசர் அவசரமாக அழைத்தார். (மானேஜ்மெண்ட் அழைக்கப்படவில்லையென அவரே கூறினர், 8 நாள் சம்பளப் பிடித்தத்தையும், சோகாஸ்நோட்டீசையும் வாபஸ் வாங்கக் மில் நிர்வாகத்தை அவர் வற்புறுத்துவாராம்.

அதற்கு கைமாருகதொழிலாளர்களின் கோரிக்கைகள் 9ல் பழிவாங்கப்பட்டவர்களை வேலைக்கு எடுப்பது லே-ஆப் சம்பளப் பிரச்சினை நீங்கலாக இதர 7 கோரிக்கைகளையும் தொழிலாளர் துறையின் கட்டாய மத்தியஸ்தத்திற்கு விட்டு விட்டு உடனே தொழிலாளர்கள் வேலைக்கு திரும்ப சம்மதம் தெரிவித்தால் மில் நிர்வாகத்திடமும் தனது ஆலோசனையைக் கூறி அவர்களையும் கட்டாய மத்தியஸ்தத்திற்கு சம்மதிக்க வைப்பாராம். இந்த அடிப்படையில் ஒரு முடிவு காணலாமென ஆலோசனை கூறினர்,

லேபர் ஆபீசரின் ஆலோசனையை தொழிலாளர்களிடம் கலந்து 5-11-73ல்முடிவு கூறுவதாகக் கூறிவிட்டு தொழிற்சங்கப் பிரதிநிதிகள் வந்துவிட்டார்கள்.

4-71-78ல்சிங்கையிலுள்ள அனைத்து சங்கங்களும் தங்கள் சங்கத்தில் சங்க அங்கத்தினர்கள் கூட்டத்தைக் கூட்டினர்கள்.

சுமார் 2000க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் அங்கத்தினர்கள் கூட்டங்களில் கலந்து கொண்டு விவாதம் நடத்தியது குறிப்பிடத்தக்க முன்னேற்றமான அம்சம்.

சோகாஸ் நோட்டீஸாலும், 8-ம் நாள் சம்பளப்பிடித்தத்தாலும், நாங்கள் பணிய முடியாது இன்னும் எத்தனை நாள் நீடித்து எங்களைப் பட்டினி போட்டாலும், கட்டாய மத்தியஸ்தத்திற்கு கோரிக்கைகளை விடக்கூடாது. கோரிக்கைகளைப் பற்றி இருதரப்பும் பேசி ஒரு நியாயமான ஒப்பந்தம்தான் செய்ய வேண்டுமெனவும் அதுவரை தொடர்ந்து போராடுவதெனவும் ஒரே குரலில் சங்க அங்கத்தினர்கள் கூட்டங்களில் அனைத்து சங்கத்திலும் தொழிலாளர்கள் போர்க்குரல் கொடுத்துவிட்டார்கள்.

இதற்குப்பின் 4—11—73ம் தேதி இரவு அனைத்துச் சங்கப் பிரதிநிதிகள் கூட்டம் ஏ வி ராமன் தலைமையில் நடைபெற்றது. கட்டாய மத்தியஸ்தத்தை அனைத்து சங்கங்களுமே நிராகரித்து விடுவதெனவும், உடனடியாக பேச்சுவார்த்தை நடத்தி நியாயமான முடிவுக்கு வருவதுதான் சரியாக இருக்கும் எனவும் அதற்கு தாங்கள் தயார் என லேபர் ஆபீஸரிடம் அறிவித்து விடுவதெனவும், பேசி நியாயமான முடிவு காணும் வரை தொடர்ந்து போராட்டத்தை நடத்துவது என்றும் ஏகமனதாக முடிவு செய்துள்ளார்கள்.

அனைத்து சங்கக்கூட்டம் நடக்கும் இடத்தின் முன்பு சுமார் 1000-க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் கூடி நின்ருர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

### சீனத்துக்கும் ஆஸ்திரேலியாவுக்கும்

# புதிய உறவுகள்

டோக்கியோ, நவ 6—

சீனவுக்கு ஆஸ்திரேலியா 3ஆண்டுகளுக்கு கோதுமை விற்பது என்றும், ஆசியன் பசிபிக் பகுதியில் சமாதான நிலை வகிக்க ஆஸ்திரேலியா முக்கிய அங்கம் வகிக்கும் என்றும் இரு நாடுகளுக்கு மிடையே ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

### சீனவோடு உறவு

ஆஸ்திரேலியபிரதமர்காவ் விட்லம் சீனவுக்கு விஜயம் செய்ததையொட்டி இவ்வொப்பந்தம் ஏற்பட்டது. சீனவுக்கு விஜயம் செய்த முதல் ஆஸ்திரேலியப் பிரதமர் விட்லம் தான். விட்லம் ஏற்கெனவே, அவரது கட்சியான தொழிற்கட்சியின் சார்பாக எதிர்க்கட்சித் தலைவராக இருந்த போது 1971-ல் சீனவுக்கு வந்துள்ளார் ஐரோப்பிய நாடுகளுடனும் அமெரிக்காவோடும் உள்ள ஆஸ்திரேலியாவின் நீண்டகால உறவை ஆசியா பசிபிக் பகுதியில் ஒரு முக்கிய நாடாகவிளங்குவதையே முக்கியமெனவிட்டுமூலாலும், அவரது கட்சியாலும், கருதப்படுகிறது.

இந்த அடிப்படையில் சீனவோடு நெருக்கமான உறவை வைத்துக்கொள்ளவே அவர் விருமபுகிருர்,

சீனவுக்கு வந்திருந்த விட்லம் சீனப் பிரதமர் சூ-என் லாய்க்கு பீகிங்கில் விருந்தளித்தார்.

### சீனவுக்கு நன்றி

அவ்விருந்தில் அவர் பேசும்போது கடந்தகாலத்தில் ஏற்பட்ட தவறுகளை நாம் முற்றிலும் புரிந்துள்ளோம்,' என்று குறிப்பிட்டார்.

மேலும் "நமது பகுதியில் ஆஸ்திரேலியா முக்கிய பங்குவகிக்கமுடியும், வகுக்க வேண்டும் என்ற கருத்தை உறுதிப்படுத்தியதற்காக நான் உங்களுக்கு (சீனவுக்கு) நன்றி செலுத்துகிறேன். நான் தாயகம் திரும்பும்போது ஆஸ்திரேலிய நாட்டின் பொறுப்பின் அவசியத்தை உணர்கிறேன்" என்ருர்,

### சூயென்லாய் பேச்சு

விருந்தில் பேசிய சீனப் பிரதமர், கடந்த நான்கு நான்கு நாட்கள் விட்லமோடு நடத்திய பேச்சுவார்த்தைகள் இருநாடுகளுக்கும் பயனுள்ளதாகும் எனக்குறிப்பிட்டார். மேலும் இருநாடுகளுக்கு மிடையே விஞ்ஞான தொழில் நுட்ப விஷயங்களின் பரிமாற்றங்களை பலப்படுத்திக் கொள்ள இரு நாடுகளும் முடிவு செய்துள்ளதையும் குறிப்பிட்டார்.

### புதுக்கோட்டை

## தர்ணு தோழர்கள் வழக்கு

### மேலும் தள்ளிவைப்பு

புதுக்கோட்டை, நவ. 6—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் கடந்த செப். 1-ந் தேதியன்று புதுக்கோட்டையில் நடந்த விலைவாசி உயர்வு எதிர்ப்பு தர்ணுவில் கைது செய்யப்பட்ட பி. குமாரவேல் உட்பட 15 தோழர்கள் மீதான வழக்கு இன்னும் திரும்பப் பெறப்படவில்லை,

அந்த வழக்கு நேற்று (5ந் தேதி) நடந்து மீண்டும் 15—11—73க்கு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது.

### பீடித் தொழிலாளர்கள்

## கொடுமையான சுரண்டலுக்கு உள்ளாகின்றனர்

### தோழர் ஏ, கே. ஜி. அறிக்கை

வேலூர் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வரும் தோழர் ஏ. கே. கோபாலன் எம். பி. பீடித்தொழிலாளர் கமிட்டிக்கு அனுப்பியுள்ள செய்தி வருமாறு:—

நாடு வறுமையிலும், பஞ்சத்திலும் பட்டினியிலும் உழலுகின்ற இந்த நேரத்தில் தென் மாநில பீடித் தொழிலாளர் கமிட்டிக் கூட்டம் நடைபெறுகிறது. உழைக்கும் வர்க்கத்துக்கும் மத்தியதர வர்க்கத்துக்கும் வாழமுடியாத அளவில் இதற்கு முன்னர் இல்லாத அளவு விலைகள் ஏறியுள்ளன. வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்காகத்தொழிலாளர்களும், ஊழியர்களும் நடத்தும் போராட்டங்களை மத்திய, மாநில அரசுகள் கடுமையான அடக்குமுறை ஆயுதத்தால் அடக்குகிறது.

அரசு நிறைவேற்றிய சட்டங்கள் அமுல் படுத்தப்படுவதற்காகத் தொழிலாளர்கள் நடத்தும் அமைதியான போராட்டங்கள்கூட அரசின் அடக்குமுறைக்கு உள்ளாகிறது, ஆனல் அரசின் சட்டத்தை மீறுபவர்கள் கைதுசெய்யப்படுவதில்லை.

தொழிலாளர் வர்க்கத்தில் கொடுமையான சுரண்டலுக்கு உள்ளாக்கப்பட்டிருப்பவர்கள் பீடித் தொழிலாளர்கள் தான். எட்டு மணி நேரத்துக்கும் அதிகமாக அவர்களிடமிருந்து வேலை வாங்கப்படுகிறது போனஸ் கிடையாது, வார விடுமுறை கிடையாது, பல்வேறு போராட்டங்கள் வாயிலாக 1965-ம் ஆண்டு பீடித் தொழிலாளர் சட்டம் நிறைவேற்றப் பட்டது. அந்தச் சட்டம் கூட பல்வேறு மாநிலங்களில் அமுல்படுத்தப்படவில்லை.

தென் மாநிலங்களின் பீடித் தொழிலாளர் கமிட்டி கீழ்க்காணும் வழி முறைகளில் செயல்படவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்,

ஒரு தேதி குறிப்பிட்டு அந்தத் தேதியில் தற்சமயம் இருக்கின்ற சட்டத்தை அமுல்படுத்தும்படி கோர வேண்டும்,

2) எல்லா பகுதியிலும் ஒரு குறிப்பிட்ட நாளன்று கலெக்டர் அலுவலகங்கள் முன் பீடித் தொழிலாளர்கள் தர்ணு நடத்த வேண்டும். கோரிக்கை மகஜர் கலெக்டர் வாயிலாக அரசுக்குக் கொடுக்க வேண்டும்.

3) பீடித் தொழிலை அரசு ஏற்கவேண்டுமென்றும், தொழிலாளர் கூட்டுறவு முறையில் பீடித் தொழில் நடத்த வேண்டும் என்றும் கோரி பரவலான இயக்கம் நடத்த வேண்டும்.

4) தற்சமயம் நடைமுறையிலிருக்கும் சட்டம் 1965-ல் நிறைவேற்றப்பட்டது. அதற்குப் பின்னர் விலைகள் எவ்வளவோ ஏறி விட்டது. எனவே தொழிலாளர் பிரதிநிதிகளுடன ஆலோசனை நடத்தி பழைய சட்டம் திருத்தப்பட வேண்டும். வரும் பட்ஜெட் தொடர் கூட்டத்திலேயே மத்திய அரசு திருத்தச் சட்டத்தைக் கொண்டு வர வேண்டுமென்று நாம் வற்புறுத்த வேண்டும்.

தென்மாநிலங்களில் பீடித் தொழிலாளா இயக்கத்தை வலுவடையச்செய்து அகில இந்திய மாநாடு நடத்துவதற்கான முயற்சிகளை மேற்கொண்டு பீடித்தொழிலாளர்களுக்கானஒரு அகில இந்திய அமைப்பு ஏற்படுத்த வேண்டும்,

இந்த பிரச்னைகளை நான் நாடாளுமன்றத்திலும் எடுத்துச்சொல்வேன். உங்களது கோரிக்கைகளுக்காகவும், போராட்டங்களுக்காகவும் நாடாளுமன்றத்துக்குள்ளேயும் வெளியேயும் எல்லா வகையிலான எனது ஆதரவு உண்டு.

### போக்குவரத்து தொழிலாளர்களுக்கு ஆதரவு

குமரி மாவட்டத்தில் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள அரசுப் போக்குவரத்து தொழிலாளர்களுக்கு முழு ஆதரவும் ஒத்துழைப்பும் தெரிவிக்கும் தீர்மானத்தை பீடித் தொழிலாளர் கமிட்டி நிறைவேற்றியது. டிஸ்மிஸ், சஸ்பென்சன் உத்தரவுகளை வாபஸ் பெற்று தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றும்படி கமிட்டி தமிழக அரசைக் கேட்டுக் கொண்டுள்ளது,

### புதுக்கோட்டையில்

கடந்த இரு வாரகாலமாக வேலை நிறுத்தம் செய்து வரும் குமரி மாவட்ட அரசு போக்குவரத்து ஊழியர்களுக்கு ஆதரவாக நேற்று (திங்கள்) ஆர்ப்பாட்டம் நடந்தது.

புதுக்கோட்டைச் கலெக்டர் அலுவலகம் முன் நடந்த இந்த ஆர்ப்பாட்டத்தில் ஏராளமானேர் கலந்து ஆவேசமாக முழக்கங்கள் எழுப்பினர்.

# கேரளத்தில் மாதர்கள் தர்ணு

திருவனந்தபுரம், நவ, 6—

ரேஷன் அரிசி விலையை கேரள அரசு உயர்த்தியுள்ளதைக் கண்டித்து நேற்று கேரள மெங்கும் கிராம அலுவலகங்கள் முன்னர் மாதர்கள் தர்ணு நடத்தினர்.

இந்த தர்ணுபோராட்டம் கேரள மாதர் சங்கத்தின் தலைமையில் நடத்தப்பட்டது,

ஆயிரக்கணக்கான மாதர்கள் இந்த தர்ணுப் போராட்டத்தில் வெயிலையும், மழையையும் பொருட்படுததாது கலந்துகொண்டனர்.




# ★ நத்தையில் முத்து ★

தமிழ் திரையுலகில் புதுமை ஏற்படுத்த முயற்சித்திருக்கிருர் திரு கே எஸ் கோபாலகிருஷ்ணன்; 'நத்தையில் முத்து' வாயிலாக,

பழமையின்—மூட நம்பிக்கைகளின்—ஜாதி வெறியின் கோரப் பிடியில் ஆழ்ந்துள்ள பிராமண வக்கீல் அகத்துப் பையன் மேல்நாடு சென்று படித்துவிட்டுத் திரும்புகிருன். திரும்பிய அன்றே தனது வீட்டு வேலைக்காரனின் மகளான சேரிப் பெண்ணை கண்டு காதலிக்கிருன்; அவளையே கட்டுகிருன். தனது மகனது மனதைச் சிறைப்படுத்தியவளது மானத்தை சிறைப்படுத்த ரவுடியையே துணைக்கழைக்கும் அம்மாவையே சீர்திருத்தம் பேச வைக்கிருன். இது தான் நத்தையில் முத்து கதை.

ரியலிசம், சீர்திருத்தம் ஆகியவற்றைக் காந்தியத்தில் குழைத்து ஊட்ட முயற்சிக்கிருர் கோபால கிருஷ்ணன்.

ஆனல் அவர் தனது முயற்சிகளில் வெற்றிபெற்றிருக்கிருரா? இந்த 20-ம் நூற்றுண்டின் இறுதிக் கட்டத்துக்கு பொருந்தக்கூடிய வழி முறைகளைத்தானு அவர் உபதேசித்திருக்கிருர்?

கட்டுப்பாடாக வளர்க்கப்பட்ட பிராமண வீட்டுப் பையன் மது (முத்துராமன்) மேல்நாட்டும் படிப்பை முடித்துவிட்டு வந்தஅன்றே சேரிப்பெண்ணை செல்லக் கண்ணுவை (கே. ஆர் விஜயா) காதலிப்பது நம்பும் படியாகவா இருக்கிறது? இவர்கள் கணவன் மனைவியாக வேண்டும் என்ற கே எஸ் கோபாலகிருஷ்ணனின் ஆசை நிறைவேறுவதற்காக செல்லக்கண்ணுவின் சேலையை ஆற்று வெள்ளம் அடித்துச் செலவதும், அவள் முழு அம்மணமாக கரை ஏறி ஓடுவதும் பாழடைந்த குடிசைக்குள் நுழைவதும், அங்கு பாம்பு படம் எடுத்து ஆடுவதும் அங்கேயே மது நுழைவதும்...... இந்தமாதிரியாகத்தானு இருக்கவேண்டும், இவை படத்தின் ரியலிசத் தன்மைக்கு வேட்டு வைக்கிறதே?

ஜாதிய வெறியின் உச்சி...யிலேயே நிற்கின்ற பிராமணப் பெண்ணன மதுவின் தாயார் அலமு, (வரலட்சுமி) மகன் சேரிப்பெண்ணைக் கட்டினுல் அந்தமகன் கைகளால் தன் இறுதிச் சடங்குகள் நடத்தப்படுவதையே விரும்பாத அலமு, சேரிப் பெண்ணன தனதுமகனின் மனைவி கர்ப்பிணியாக இருக்கிருள்என்பதையறிந்ததும் அவளுக்கு விருப்பமான மீன் குழம்பு சம்பாதித்துக் கொண்டுசேரிக்குச்சென்று அவளை வலுக்கட்டாயமாக ஊட்ட முயற்சிப்பது நம்பும்படியாகவா இருக்கிறது?

படத்தின் கடைசிக் கட்டத்தில் வரலட்சுமியை பாம்பு கடிக்கிறது. வரலட்சுமியின் வாயிலிருந்து நுரை தள்ளுகிறது பிறகு விஷமில்லாதபாம்பு கடித்ததாக டாக்டர் சொல்கிருர், விஷமில்லாத பாம்பு கடித்தால் நுரை தள்ளாதே!

ஜாதிப் பிரச்சனையை—ஜாதி வெறியை கருவாகக் கொண்ட படத்தில் காலாவதியாகி விட்ட காந்தீயத்தைப் புகுத்தி காந்தீயத்தான் ஜாதி, ஏழ்மை ஆகியவற்றை ஒழிக்கும் என்று காண்பிக்க வந்து விடுகிருர் கோபால கிருஷ்ணன்-வழக்கமான முதலாளித்துவக் கருத்து, முதலாளிதுவக் குரல்.

கிராமப்புறத்தில் சுற்றித் திரியும் கதாநாயகனுக்கு, அங்கு கூலி உயர்வு கோரி வேலை நிறுத்தத்துக்கான தயாரிப்புகள் நடப்பதைக் கண்டதும் ஆத்திரம் பொத்துக்கொண்டு வருகிறது. "சம்பளப் பிரச்சனை பிறகு பேசித் தீர்த்துக் கொள்ளலாம், அது வரையிலும் வேலைக்குச் செல்லவேண்டியது தானே" என்று அரிய உபதேசத்தை கதாநாயகன் கொட்டுகிருர்.

இந்த உபதேசத்தை அமல்படுத்தத் தானே காந்தியடிகள் ஐ என் டி யூ சி சங்கத்தை அமைத்தார்; வேலை நிறுத்தம் தேவையில்லை, சமாதான வழியில் பேசித் தொழிற் பிரச்சனைகளில் தீர்வுகாணலாம் என்று சொல்லிக் கொண்டு. ஆனல் அதே ஐ என் டி யூ சி சங்கத்துக்குக்கூட இன்று வேலைநிறுத்தம் செய்ய வேண்டிய நிலைமைகள் ...

இந்த சரித்திர உண்மையை ஒரு திரைப்படம் வாயிலாக மூடி மறைக்கப் பார்த்தால் இயலுமா? 'வேலை நிறுத்தம் கூடாது அது உற்பத்தியைக் குலைக்கும், வாழ்க்கையை பின்னேக்கித் தள்ளிவிடும்' போன்ற கதாநாயகனின் வசனங்களைக் கேட்கும் போது கைதட்டும் உயர்ந்த டிக்கட்காரர்களாவது தங்களது வாழ்க்கைப் பிரச்சினை, உரிமைபிரச்சினை வரும்போது 'வேலை நிறுத்தம் வேண்டாம்' என்று சொல்வார்களா?

கூலி நேய்டால் கொலை வாளைத் தீட்டும் தஞ்சாவூர் மிராசுதார்களிடம் சென்று வாழ்க்கைச் சுமைகளைத் தாங்கிக் கொண்டே கோரிக்கைகளை வைத்து விட்டு அமைதியாக வேலைக்குச் சென்றுகொண்டிருந்தால் கூலியை உயர்த்திக் கொடுத்து விடுவார்களா? "மயிலே மயிலே இறகு போடு என்ருல் மயில் இறகு போடுமா?

உழைப்பாளிக்குக் கத்தியின்றி ரத்தமின்றி நிலம் சம்பாதித்துக் கொடுக்க அவதரித்த விநோபாவே இன்று இருக்கும் இடம் தெரியவில்லையே! அவர் எத்தனை ஏக்கரா நிலத்தை நிலப்பிரபுக்களிடமிருந்து சாத்வீக முறையில் பெற்று ஏழை உழவர்களுக்குக் கொடுத்தார்.

இன்னும் சட்டத்தில் அரிஜனங்களுக்கு என்னவெல்லாமோ சலுகைகள் அளிக்கப்பட்டிருப்பதாகவும் அரிஜனங்களின் அறியாமையினுலும், அரசியல் தலைவர்களாலும் அவை மூடி மறைக்கப்பட்டு அவற்றை அரிஜனங்கள் பிரயோஜனப்படுத்த முடியவில்லை என்றும் கதாநாயகன் பேசுகிருர்.

ஏழை அரிஜனங்களுக்கு உழைத்துச் சாப்பிட, கால் நீட்டிப் படுத்துறங்கிட நிலம் கொடுக்க வேண்டுமென்று சட்டத்தின் எந்த மூலையில் எழுதப்பட்டிருக்கிறது? ஏன் அரிஜனங்களுக்கு ஆயிரக் கணக்கில் படுகொலை செய்யப்படுவதிலிருந்தும், கற்பழிப்புக்களிலிருந்துமாவது ...டங்கள் இருக்கிறதா? இருந்தாலும் இன்றைய அமைப்பில் அமுல்நடத்தப்பட முடியுதா?

"எட்டு மணி நேர வேலை, எட்டு மணி நேர ஓய்வு, எட்டு மணி நேரம் பொழுது போக்கு என்றுதானே சட்டம்இருக்கிறது? அந்த எட்டு மணி நேரமும் கூட வேலை செய்யாமலிருந்தால் அது முறையா" என்று கதாநாயகன் கேள்வி தொடுக்கிருர். எட்டு மணி நேர வேலை மறுக்கப்படும்போது, எட்டு மணி நேர ஓய்வுக்கு ஊறு ஏற்படும்போது எட்டு மணி நேர பொழுதுபோக்கு கிடைக்காத போது தானே தொழிலாளி வேலை நிறுத்தம் செய்கிருன்? ரயில்வே தொழிலாளிகள் அதுதானே கோரினுர்கள்? வேலை நிறுத்தம் செய்தே யாகவேண்டும் என்பது தொழிலாளர்களின் விருப்பமல்ல, தொழிற் சங்கங்களின் விருப்பமுமல்ல, சுரண்டிக் கொழுக்கும் முதலாளித்துவம் தான் அவர்களை வேலை நிறுத்தம் செய்ய வைக்கிறது.

அடுத்து ஜாதி வெறியைச் சாடும் கே. எஸ். கோபால கிருஷ்ணன் தெரிந்தோ தெரியாமலோ பிராமணீயம் உயர்வானது என்றும் பறைய குலம் தாழ்வானது என்றும் வரலட்சுமியால் சொல்ல வைக்கிருர். அதாவது தனது சென்ற கால ஜாதி வெறிக்காகவும், வெறிச்செயல்களுக்காகவும் பச்சாத்தாபப்படும் அலமு (வரலட்சுமி) சேரிப் பெண்ணன செல்லக் கண்ணுவைப் பார்த்து, 'நீ தான பிராமணப்பெண், நான் பறைச்சி' என்று சொல்கிருர். சேரிப்பெண்ணின் நல்ல குணத்தை வர்ணிக்க கேஎஸ் கோபால கிருஷ்ணனுக்கு வேறு வார்த்தைகள் கிடைக்கவில்லையா?

எனினும் கே. எஸ். கோபால கிருஷ்ணன் 1947-க்குப் பிறகு ஆட்சி பீடங்களில் ஒட்டிக்கொண்டிருப்பவர்கள் எவர் எவர் என்பதை நன்கு சித்தரித்திருக்கிருர்,

காசு கொடுத்து ஓட்டு ...

நிலையை அம்பலப்படுத்துகிருர்.

ஒத்தையடிப் பாதையிலே நின்று பெண்களுக்கு தொந்தரவு கொடுக்கின்ற, பெண்களது கற்பை கவர முயலுகின்ற பஞ்சாயத்துப் போர்டு பிரசிடெண்டாக எம் ஆர் ஆர் வாசு நன்கு நடித்திருக்கிருர். வடநாட்டு, தென்னுட்டுக் காந்தியடிகளின் சீடர்கள் தானே 47-லிருந்து இன்று வரை பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்டுகளாகவும், அது போன்ற பதவிகளிலும் ஒட்டிக்கொண்டு கிராம மக்களை ஆட்டிப்படைக்கிருர்கள்.

அதேபோன்று இளம் வயதிலேயே பிராமண ஆசாரக் கொடுமைகளால் நிரந்தர விதவையாக வேண்டிய நிலை ஏற்பட்ட பட்டு (சந்திரகாந்தா) வாயிலாக ஜாதிக் கொடுமைகளையும், ஜாதி வெறியின் அலங்கோலங்களையும் சொல்லச் செய்திருப்பது சிறப்பான உத்தியே,

மேலும் தங்கள் தங்கள் பாத்திரங்களை நடிகர்கள் குறைவின்றி நிறைவேற்றியிருக்கிருர்கள்.

நத்தையில் முத்து—முத்துண்டு ஆனல் முதிர்ச்சி பெற்ற முத்தல்ல

# கேரளத்தில் 5411 எஞ்சினியர்களுக்கு வேலையில்லை

திருவனந்தபுரம், நவ. 7—

கேரளத்தில் வேலை தேடித் தரும் நிலையங்களின் கணக்குப்படி இந்த வருடம் ஜூன் மாதம் இறுதி வரையிலும் 5411 எஞ்சினியரிங் பட்டதாரிகள் வேலையில்லாதிருக்கின்றனர்.

இவர்களில் 2187 எஞ்சினியர்கள் மெக்கானிகல் எஞ்சினியர்களாகும்.

## நடக்க இருப்பவை

**மதுரையில் மார்க்சிஸ்ட்கட்சி பொதுக்கூட்டம்**

நாள்: 8—11—73-ந் தேதி மாலை 7 மணிக்கு

இடம்: தெற்குமாரட் வீதி காஜிமார் தெரு அருகில்

தோழர் **என். சங்கரய்யா** பேசுவார்

## தோழர் ஏ. கே. கோபாலன் வாழ்த்துச் செய்தி

# “தீக்கதிர்” பத்திரிகை படியுங்கள் - பரப்புங்கள்

# வெகுஜன இயக்கங்களுக்கு தோழர் ஏ. கே. ஜி. அறைகூவல்

வேலூர், நவ. 7— வேலூர்மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவரும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அரசியல் தலைமைக் குழு உறுப்பினரும் பாராளுமன்ற எதிர்க்கட்சித்தலைவருமான தோழர் ஏ கே கோபாலன் எம் பி “தீக்கதிர்” புதுக்கட்டிடத்திறப்பு விழாவுக்கு அனுப்பியுள்ள வாழ்த்துச் செய்தி விவரம் வருமாறு:—

வரலாற்றுச் சிறப்புமிக்க நவம்பர் 7-ந் தேதியான நவம்பர் புரட்சிதினத்தன்று “தீக்கதிர்” தன்னுடைய சொந்த கட்டிடத்திலிருந்தும், அச்சகத்திலிருந்தும் வெளிவரும் செய்தியறிந்து பெரு மகிழ்வெய்துகிறேன்.

கட்சி உறுப்பினர்களும் ஆதரவாளர்களும், தீக்கதிரின் விற்பனை எண்ணிக்கையை உயர்த்தப் பாடுபடுவார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்.

‘தீக்கதிரை’ வாசிக்கவும் பரப்பவும் மக்கள் வாசகர் குழுக்கள், பல பிரிவுகளாகஇயங்கச்செய்யுமாறு அனைத்து வெகுஜன இயக்கங்களையும் நான் வேண்டிக் கொள்கிறேன் “தீக்கதிர்” நம் நாட்டினுடைய புரட்சி இயக்கத்தின் ஒளிவிளக்காக பணியாற்றும் என்பதில் எனக்கு உறுதியான நம்பிக்கைஉண்டு.

“தீக்கதிர்” வெகு வேகமாக வெற்றி நடைபோட்டு முன்னேறுமாறு வாழ்த்துகிறேன். “தீக்கதிரின்” முன்னேற்றத்திற்காக பல்லாற்றாலும் உதவிய அனைவருக்கும நன்றி கூறுவதோடு, மேலும், மேலும் தீக்கதிரினுடைய எதிர்கால வளர்ச்சிக்கும் உறுதுணையாக இருக்குமாறு அவர்களை வேண்டிக் கொள்கிறேன்,

தோழமை

வாழ்த்துக்களுடன்

ஏ. கே. கோபாலன்

(ஒப்பம்)

இவ்வாறு தோழர் ஏ கே கோபாலன் வாழ்த்துச் செய்தி அனுப்பி உள்ளார்.

## அச்சுதர் ஆட்சியில்...

திருவனந்தபுரம், நவ. 7— கேரளத்தில் அச்சுதமேனன் ஆட்சியில் 902 கொலைகளும். போலீசாரால் 12 துப்பாக்கிச் சூடுகளும் நடத்தப்பட்டிருக்கின்றன.

இத்தகவலை கேரள சட்டசபையில் உள்துறை அமைச்சர் கருணாகரன் தெரிவித்தார்.

## நெல்லை மாவட்ட சோசலிஸ்ட் கட்சி ஊழியர் கூட்டம்

கோவில்பட்டி, நவ 7— நெல்லை மாவட்ட சோசலிஸ்ட் கட்சி ஊழியர்கள் கூட்டம் கோவில்பட்டியில் 11-11-73 ஞாயிறு பகல் 1 மணிக்கு நடைபெறும், இந்த கூட்டத்தை நெல்லை மாவட்ட செயலாளர் தோழர் ஆ பூ சுப்பையா கூட்டியுள்ளார்.

தமிழ்நாடு சோசலிஸ்ட் கட்சி கூட்டுச் செயலாளர் தோழர் ஆர் வி சாமி இந்த கூட்டத்தில் கலந்து கொள்வார்.

இக்கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும், சோசலிஸ்ட் கட்சிக்கும் ஏற்பட்ட உடன்பாட்டை அமுல் நடத்தவும் 19-ந் தேதி தமிழ்நாட்டில் நடைபெறும் சோசலிஸ்ட் - மார்க்சிஸ்ட் கட்சிகள் தலைமையிலான நேரடி நடவடிக்கை பற்றியும் ஆலோசிக்கப்படும்.

## விலைவாசி உயர்வை எதிர்த்து

# டெல்லியில் வரலாறு காணாத பந்த்

## அன்றாட வாழ்க்கை ஸ்தம்பித்தது

டெல்லி, நவ. 7— சுதந்தரத்துக்குப் பின்னர் முதல் தடவையாக வரலாறு படைத்த ஒரு ‘பந்த்’ (முழு அடைப்பு) நேற்று விலைவாசி உயர்வைக்கண்டித்து டெல்லியில் நடத்தப்பட்டது.

முழு வெற்றிகரமாக நடந்த இந்த ‘பந்த்’ காரணமாக டெல்லியின் அன்றாட வாழ்க்கை நேற்று முழுமையாக ஸ்தம்பித்தது.

பெரிதும் சிறிதுமான ஓட்டல்கள், டி சி எம் மில், பிர்லா மில், சுதந்திரபாரத மில், அயோத்யா மில் உள்பட பல மில்கள் எஞ்சினியரிங் ஆலைகள், அரசு பஸ் போக்குவரத்து, ரிசர்வ் பாங்கு ஆகியவை பந்த் காரணமாக இயங்கவில்லை.

சாந்தினி சவுக் கனாட் பிளேஸ், காரிபோலி, சாதர் பசார், கரோல்பாக் ஆகிய இடங்களிலுள்ள மிகப் பெரிய மார்க்கெட்டுகள் வெறிச்சோடிக் கிடந்தன.

சுமார் 5 லட்சம் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம செய்து ‘பந்த்’தில் கலந்து கொண்டனர். காலையிலிருந்தே பஸ்களும், டாக்சிகளும், ஆட்டோ ரிக்ஷாக்களும், சைக்கிள் ரிக்ஷாக்களும், குதிரைவண்டிகளும் ரோடுகளின் இருபுறங்களிலும் வரிசையாக விடப்பட்டிருந்தன. அவற்றில்எதுவும்அசையவில்லை.

‘பந்த்’க்கு முந்தினநாளே எல்லா செய்திப் பத்திரிகைகளும் ‘நாளை (6-ம் தேதி) ‘பந்த்’ காரணமாக பத்திரிகை வெளிவராது’ என்று அறிவித்திருந்தனர் அதே போன்று எல்லாபத்திரிகையாளர்களும் ‘பந்த்’ல கலந்துகொண்டதால் எந்த பத்திரிகையும் வெளிவரவில்லை.

அரசு அலுவலகங்களில் ஆஜர் சதவீதம் மிகக்குறைவாகவே இருந்தது.

டெல்லி மாநகராட்சியினரால் நடத்திவரும் ஆஸ்பத்திரியில் வேலை பார்க்கும் டாக்டர்களும், நர்சுகளும் வேலைக்குச் செல்லாமல் ‘பந்த்’ ஐ ஆதரித்து கோஷங்கள் போட்டனர்.

விலைவாசி உயர்வுக்கும், காங்கிரசின்மக்கள் விரோத கொள்கைகளைக் கண்டித்தும் ‘பந்த்’நடத்த சி ஐ டி யூ ஏ ஐ டி யூ சி, யூ டி யூ சி, எச் எம் எஸ், எச் எம் பி ஆகிய தொழிலாளர் அமைப்புக்கள் விடுத்த அறை கூவலுக்கேற்ப இந்த ‘பந்த்’ நடத்தப்பட்டது.

முதலில் பந்தை எதிர்த்த ஜனசங்கத்தினர், இறுதி நிமிடத்தில் தனியாக ‘பந்த்’க்கு அழைப்பு விடுத்தனர்.

ஐ என் டி யூ சி சங்கம் ‘பந்த்’ முறையற்றது என்று அறிவித்து தங்கள் சங்கத்தவர்கள் ‘பந்தி’ல் சேரக் கூடாது என்ற வேண்டுகோள் விடுத்த பின்னரும் ஐ என் டி யூ சி சங்கத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர்

சி ஐ டி யூ சங்கங்கள் நேற்று மாலை இந்தியா கேட்டிருந்து மிகப் பெரிய ஊர்வலம் ஒன்று புறப்பட்டு பிரதமரின் வீட்டை அடைந்தது.

பிரதமரின் இல்லம் முன்பு ஆர்ப்பாட்டமும் நடத்தப்பட்டது. பின்னர் மகஜரும் கொடுக்கப்பட்டது.

இந்திரா அரசின் ‘ஹரீபி கடாவோ’ கோஷத்தின் போலித்தனத்தை இந்த மகத்தான பந்த் தெளிவுபடுத்தியது, எதிர்காலத்தில் லட்சக் கணக்காக உழைக்கும் வர்க்கம் தங்கள் வாழ்க்கைப்பிரச்னைகளுக்காக நடத்தவிருக்கும் பிரமமாண்ட போராட்டங்களின் ஒரு முன்னறிவிப்பாகவும் இந்த பந்த் தென்பட்டது.

# இன்றைய தேசீய சர்வதேசீய...

(1—ம் பக்கத் தொடர்ச்சி)

டோபர் 18 இதழில் செய்தி வெளியாகியிருந்தது.

இவையெல்லாம் காட்டுவது என்ன? உற்பத்திப் பெருக்கு என்ற பேரால், இந்திய சர்க்கார், இந்திய ஏகபோக முதலாளிகளுக்கும் அன்னிய ஏகபோக முதலாளிகளுக்கும் பெரும் சலுகைகள் கொடுக்கப்போகின்றது என்பதும், பல நாடுகளின் பூதாகர தொழில் நிறுவனங்களின் மூலதனம் இந்திய நாட்டில் ஊடுருவ, கதவைத் திறந்துவிடப் போகிறார்கள் என்பதும் தெட்டத் தெளிவாகத் தெரிகிறது.

அதே சமயத்தில், மறுபுறம் என்ன நடக்கிறது? தேவையின் அடிப்படையில் குறைந்தபட்ச ஊதியம் வேண்டும் என்று மத்திய அரசு ஊழியர்களும், மற்றுமுள்ள ஊழியர்களும், ஆலைத்தொழிலாளர்களும் கேட்டால் அந்தக் கோரிக்கையை இந்திய அரசாங்கம் நிராகரித்து விடுகிறது.

சம்பளக்கமிஷன் பரிந்துரையை நடைமுறையில் அப்படியே ஏற்றுக்கொள்வதின் மூலம், இந்திய சர்க்கார் தன்னுடைய ஊதிய முடக்கக் கொள்கையைத் திணிக்க முயற்சிக்கிறது.

நிலபிரபுக்களுக்கு உயர்ந்த விலை கொடுப்பதும்— சுரண்டல்காரர்களுக்கு கடிவாளமில்லாத லாபக் கொள்ளையும்— உழைப்பாளி மக்களுக்கு ஊதிய முடக்கமும் துன்பத்துக்கு மேல் துன்பமும்— இதுதான் அரசாங்கத்தின் கொள்கை.

### காங்கிரஸ் கட்சிக்குள் பூசல்கள்

நாட்டுமக்களின் துன்ப துயரங்கள் கடுமையாகிக்கொண்டு போகும் அதே சமயத்தில், ஆளும் காங்கிரஸ் கட்சியினர் மக்களைப்பற்றி கவலை கொள்ளாமல் உட்பூசல்களில் மிகவும் குஷியாக ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதை பொலிட்பீரோ கவனத்தில் எடுத்துக்கொள்கிறது. ஆந்திரப் பிரதேசம், உத்திரப்பிரதேசம், மத்தியப்பிரதேசம், ராஜஸ்தான், மைசூர் மற்றும் பல மாநிலங்களில் காங்கிரஸ் கட்சியினர் அதிகாரத்தைக் கைப்பற்ற முண்டியடித்துக் கொண்டிருப்பதே அன்றாட நடைமுறையாக இருக்கின்றது.

இந்த உள் சண்டைகள் கொள்கைப் பிரச்சினைகளின்பால் ஏற்பட்டவேறுபாடுகளை அடிப்படையாகக் கொண்டவை அல்ல; மாறாக, காங்கிரஸ் கட்சிக்குள் மலிந்து கிடக்கும் பயங்கரமான லஞ்ச ஊழல்களின் நேரடி விளைவே, இந்த உட்பூசல்கள். லஞ்சம், அதிகாரம், சலுகை ஆகியவற்றின் மூலம் அநியாயமாகப் பெற்ற இந்தப் பணத்தை ஆள் ஆளுக்கு பங்கு போடும் பிரச்னையை மையமாக வைத்தே இந்த உட்பூசல்கள் எழுகின்றன.

ஆளும் காங்கிரஸ் கட்சிக்குள் ஒழுக்கத்தரங்கள் அதள பாதாளத்தில் போய் விட்டன. பீகாரில் சட்டமன்ற பொதுக் கணக்குக் கமிட்டியே அம்பலப்படுத்தியும் கவர்னரே பகிரங்கமாக ஒப்புக்கொண்டும் குற்றவாளிகளின் மேல எந்த ஒரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அந்த அளவுக்கு காங்கிரஸ் கட்சிக்குள் ஒழுக்கத் தரங்கள் மோசமாகியுள்ளன.

ஆளும்காங்கிரஸ் தன்னுடைய ஒரு கட்சி சர்வாதிகாரத்தை நிலைநிறுத்திக் கொள்ளச் செய்யும் தீவிரமான தில்லுமுல்லுகளையும், மாய் மாலங்களையும் பொலிட்பீரோ தன்னுடைய கவனத்தில் எடுத்துக் கொள்கிறது. இந்த நோக்கத்திற்காக, எல்லாவிதமான ஜனநாயக நடைமுறைகளையும் தூக்கி எறிவதற்கு ஆளும் காங்கிரஸ் கட்சிக்கு எந்தவிதமான மனசாட்சியும் கிடையாது.

உத்திரப் பிரதேசத்தில் காங்கிரஸ் கட்சி ஆட்சியை நடத்த தன்னுடைய திறமையின்மையையும், கையாலாகாத் தனமையையும் வெளிக் காட்டியது.

அதன் விளைவாக ஜனாதிபதி ஆட்சி ஏற்படுத்தப்பட்டது. இப்போது மீண்டும் காங்கிரஸ் மந்திரி சபையினை ஏற்படுத்த முடிவு செய்யப்பட்டிருக்கின்றது.

அதேபோல, ராஜஸ்தான் மாநிலத்தில் உதவி முதல் மந்திரியாக இருப்பதற்காக மத்திய அமைச்சர் ஒருவரை அனுப்பவும் முடிவு செய்யப்பட்டிருக்கின்றது. இந்த முடிவுகள் எல்லாம் ஜனநாயக நடைமுறைக்காக தூக்கிஎறியும் ஒரு சில உதாரணங்களாகும்.

ஒரிசாவில், காங்கிரஸ்கட்சி சட்டமன்றத்தில் பெரும்பான்மையை இழந்ததனால் சட்டமன்றம் கலைக்கப்பட்டு, ஜனாதிபதி ஆட்சி திணிக்கப்பட்டது இத்தகையதொரு செயலினை கவர்னரின் அதிகார துஷ்பிரயோகம் என்றும், எதிர்க்கட்சித் தலைவருக்கு மந்திரி சபையினை அமைக்க போதுமான பெரும்பான்மையிருக்கிறது என்று கவர்னரே ஒப்புக்கொண்டும், மந்திரிசபை அமைக்க அவரை அழைக்க மறுத்ததின் மூலம் ஜனநாயக நெறிமுறைகள் காற்றில் பறக்க விடப்பட்டுள்ளன என்றும் ஒரிசா உயர்நீதி மன்றம் திட்டவட்டமாகக் கண்டித்துள்ளது. ஆனாலும் உயர்நீதி மன்றத்தால் சட்டமன்றம் கலைக்கப்பட்டதை மாற்றவும், அதில் தலையிடவும் முடியவில்லை. இத்தகையதொரு தீர்ப்பின் காங்கிரஸ் கட்சியும், அதன் ஆட்சியும் ஜனநாயக நெறிமுறைகளை எந்த அளவுக்கு பலிகடா வாக்கியிருக்கின்றது என்பதைத் தெளிவாகப் பார்க்கலாம்.

முல்கி விதிகள் சம்பந்தமாக மத்திய அரசாங்கம் செய்திருக்கும் முடிவானது ஆந்திரப் பிரதேசப் பிரிவினையை நிராகரித்திருக்கின்றது. தெலிங்கானா பிராந்திய கமிட்டியினை கலைத்திருக்கின்றது; முல்கி விதிகளை ரத்து செய்திருக்கின்றது அந்த அளவில் இந்த முடிவினை பொலிட்பீரோ வரவேற்கிறது. ஆனால், பெரும்பாலான அரசாங்க வேலைகளையும், நிறுவனங்களில் இடங்களை ஒதுக்குவதை ஜில்லா அளவிற்கும், வட்டார அளவிற்கும் விரிவு படுத்திருப்பது ஸ்தல மனப்பான்மையும், பிரிவினைப் போக்குகளையும் பலப்படுத்தும்நம்முடைய கட்சியின் நிலையான—ஆந்திரப்பிரதேசம் முழுமையையும் ஒன்றாகவே எடுத்துக் கொள்ள வேண்டும். அங்கு வாழும் மக்கள் வேலையையும், கல்வி நிறுவனங்களில் இடங்களையும மாநிலத்தின் எந்த ஒரு பகுதியிலும் சுதந்திரமாக தேடிக் கொள்ளலாம— ஆனால் இப்போதைக்கு முறைபே தெலிங்கானா, ஆந்திரப்பகுதிகளின் ஜனத்தொகை விகிதமான 1:2 என்ற விகிதத்தில் வேலை தர வேண்டும என்பதை பொலிட்பீரோ மீண்டும் உறுதி செய்கிறது.

### போராட்ட அலைகள்

ஒவ்வொரு மாநிலத்திலும் அரசாங்கத்தின் இந்த மக்கள் விரோத கொள்கைகளுக்கு எதிரான போராட்டங்களில் மக்கள் கிளர்ந்தெழுவதைக் கண்டு பொலிட்பீரோ மகிழ்ச்சியடைகிறது. மாநில ரீதியான, ஸ்தல ரீதியான ‘பந்த்’கள் வெகுஜன தர்ணாக்கள், மற்றும் பல்வேறுவிதமான கண்டனங்கள். பதுக்கி வைக்கப்பட்டிருக்கும் இரும்புகளை வெளிக்கொண்டு வருவது போன்ற பல நடவடிக்கைகள் நாட்டின் எல்லாபகுதிகளிலும் நடத்திருக்கின்றன. இத்தகைய நடவடிக்கைகளின் ஈட்டி முனையாக இருக்கும் உழைக்கும் வர்க்கத்தை பொலிட்பீரோ மிகவும் பாராட்டுகிறது.

தொழிலாளிவர்க்க ஒன்றுபட்ட போராட்டங்களின் வளர்ச்சியில் ஒரு முக்கியமான அம்சம் இந்தப்போராட்டங்களில் பல சமயங்களில் சி ஐ டி யூ, சங்கங்களுடனும் மற்ற உறுதியான தொழிற் சங்களுடனும் ஏ ஐ டி யூ சி சங்கங்களும், ஐ என் யூ சி சங்கங்களுடனும் கூட சேர்ந்து கொண்டிருப்பதாகும்.

இந்த எதிர்ப்பு நடவடிக்கைகளையும் போராட்டங்களையும் கடுமையான ஒடுக்குமுறை மூலம்—துப்பாக்கிப் பிரயோகங்களின் மூலம் மிருகத்தனமான தடியடிப் பிரயோகங்களின் மூலம அரசாங்கம் ஒடுக்க முயன்றிருப்பதாகும். இதற்காக பாதுகாப்பு விதிகளின் கீழும் தடுப்புக்காவல் சட்டத்தின் கீழும், உள்நாட்டுப் பாதுகாப்பு பராமரிப்புச்சட்டத்தின்கீழும்எண்ணற்றோர்விசாரணை இன்றி சிறையில் அடைக்கப்படுகின்றனர். இவ்விதம் காவலில் வைக்கப்பட்டிருப்பவர்கள் அனைவரையும் விடுதலை செய்ய வேண்டும் என்றும், விசாரணையின்றி காவலில் வைக்க வகை செய்யும் எல்லா சட்டங்களையும் ரத்து செய்ய வேண்டும் என்றும் பொலிட்பீரோ கோருகிறது.

மேற்கு வங்கத்தில், அரைபாசிஸ்ட் ஒடுக்குமுறை தாண்டவம் இன்னமும் நீடிக்கிறது. செப்டம்பர் 10ந் தேதி நடைபெற்ற தொழிலாளர் ஆலோசனைக் குழு கூட்டத்தில் எல்லா மத்திய தொழிற்சங்க ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளும், தொழிற் சங்கங்கள் மீது குண்டர்கள் தாக்குதலுக்கு எதிராக ஒன்றுபட்ட ஆட்சேபக் குரல் எழுப்பும் அளவுக்கும் கீழ்வரும் நடவடிக்கைகளை அரசாங்கம் அவசரமாக எடுக்க வேண்டும் என்று கோரும் அளவுக்கும் நிலைமை மோசமடைந்துள்ளது.

1) தொழிற்சங்க ஊழியர்கள் மீது குண்டர் தாக்குதலை தடுக்க வேண்டும்.

2) மற்ற தலைவர்களால் பலாத்காரமாகப்பிடிக்கப்பட்டிருக்கும் தொழிற்சங்கங்களைத் திரும்ப ஒப்படைக்க வேண்டும்,

3) இடம் விட்டு பெயர்ந்திருக்கும் மக்களை மீண்டும் அவர்களுடைய வீடுகளுக்குத் திரும்புமாறு செய்திருக்க வேண்டும்.

4) பயங்கர வெறித் தாக்குதல்காரணமாக தொழிற்சாலைகளில் வேலைக்குச் செல்ல முடியாமலிருந்த தொழிலாளர்கள் திரும்ப வேலைக்கு எடுத்துக்கொள்ளுமாறு செய்ய வேண்டும்.

எனினும் இந்தத் தீர்மானத்தின் மீது அரசாங்கம் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை,

### போலீஸ் ராஜ்யம்

மற்றொரு முக்கியமான சம்பவம் நாட்டில் போலீஸ் ராஜ்யம் நிலவுவதாகும். போலீஸ் காவலில் வைக்கப்படும் பிரஜைகள் சித்திரவதை செய்யப்படுகின்றனர். சாகடிக்கப்படுகின்றனர். இந்த அட்டூழியங்களைச் செய்யும் போலீசார் எவ்வித நடவடிக்கைக்கும் உள்ளாக்கப்படுவதில்லை. போலீஸ் எவ்விதக் கட்டுப்பாடின்றி அதிகாரம் செலுத்துகிறது என்பதை மீரட்டில்மாஜிஸ்டிரேட்ஒருவரே கண்மூடித்தனமாக அடித்து நொறுக்கப்பட்டிருக்கும் நிகழ்ச்சி எடுத்துக்காட்டுகிறது, சில குண்டர்களால் கல்லூரி மாணவி ஒருத்தி கடத்தப்பட்ட சம்பவத்தில் போலீஸ் செயலற்று போனதை எதிர்த்து அமைதியான முறையில் ஆட்சேபம் செய்த மக்கள் மீது தடியடிப் பிரயோகம் செய்வதற்குப் போலீசுக்கு அனுமதி கொடுக்க மறுத்ததற்கே மாஜிஸ்திரேட் அடித்து நொறுக்கப்பட்டார்.

போலீஸ் அட்டூழியங்களைக் கட்டவிழ்த்து விடுவதில் அச்சுதமேனன் தலைமையில் அமைந்துள்ள கேரள அரசாங்கம் அனைவரையும் மிஞ்சியுள்ளது. மக்கள் போராட்டங்களில் போலீஸ் காவலில் ஆயிரக்கணக்கான பேர் சித்திரவதை செய்யப்பட்டுள்ளனர், போலீஸ் காவலில் பெண்கள் கற்பழிக்கப்படுகின்றனர். இதன் விளைவாக இருபெண்கள் தற்கொலை செய்து கொண்டனர் ஆயினும் உள்துறை அமைச்சர் இந்தப் பெண்களை விபச்சாரிகள் என்று வர்ணித்து கற்பழிப்பை வெட்கமற்ற முறையில் நியாயப்படுத்தியுள்ளார்.

### அரிஜனங்கள் மீது தாக்குதல்

சமீப காலத்தில் மற்றொரு முக்கிய அம்சம், கிராமப் புறங்களில் நிலப்பிரபுக்கள் அரிஜனங்கள் மீது தாக்குதல் தொடுப்பது அதிகரித்திருப்பதாகும். அரிஜனப் பெண்கள் கற்பழிக்கப்படும் போது கூட எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படுவதில்லை. அரிஜனங்களுக்கு எதிராக இழைக்கப்படும் இந்த அட்டூழியங்களைப் பார்த்துக் கொண்டு அரசாங்கம் வாளாவிருக்கிறது. இவ்வாறு இருப்பது இந்த மனிதத்தன்மையற்ற குற்றங்களுக்கு அரசாங்கம் உடந்தையாக இருப்பதற்கே ஒப்பாகும்.

இந்த மிருகத்தனமான அடக்குமுறை வலுத்த போதிலும், மக்கள் பணியாமல் ஆட்சேப நடவடிக்கைகளை பெருக்கி கொண்டிருப்பதைப் பார்த்து பொலிட்பீரோ மகிழ்ச்சி அடைகிறது. தங்களுடைய நியாயமான கோரிக்கைகளை நிறைவேறச்செய்வதற்கு விரிவான இயக்கம் நடத்துவதற்கு மத்திய மாநில அரசு ஊழியர்கள் ஆயத்தங்கள் செய்வதை அரசியல் தலைமைக்குழு வரவேற்கிறது. அரசின் தாக்குதலை எதிர்ப்பதற்கு ஒன்றுபட்டு நின்று ஒற்றுமையை வளர்க்குமாறு அது மத்திய, மாநில அரசு ஊழியர்களை அழைக்கிறது. மக்களுடைய சீற்றம் பீறிட்டு வரும் நிலையில பல மாநிலங்களில் காலங்கடந்தேனும் வலது கம்யூனிஸ்டுகள் எதிர்ப்பு நடவடிக்கைகளில் சேருமாறு நிர்ப்பந்திக்கப் பட்டுள்ளனர்

சமீப போராட்டத்தில் லோகோ ஊழியர்கள் பெற்ற வெற்றியை ஒன்றுமில்லாமல் செய்வதற்கு முயற்சி செய்யப்படுகிறது, இந்த ஒப்பந்தத்தை அமுலாக்கும் அதிகாரம் படைத்த ரயில்வே போர்டு ஒப்பந்தத்தை குலைக்க முயலுகிறது. ரயில்வே போர்டு ஒப்பந்தத்தைக் குலைத்தால் கடும் விளைவுகள் ஏற்படும் என்று பொலிட்பீரோ எச்சரிக்கிறது. இதன் விளைவுகளுக்கு அரசாங்கமே பொறுப்பேற்க வேண்டும்.

நவம்பர் 19-ந் தேதி பந்திலும், பொது வேலை நிறுத்தத்திலும் முடியும் முறையில் மேற்கு வங்கத்தில் தர்ணாக்களுக்கு ஏற்பாடு செய்திருக்கும் 9 இடதுசாரி கட்சிகளின் தீர்மானத்தை பொலிட்பீரோ வரவேற்கிறது. வலது கம்யூனிஸ்ட் கட்சி அதன் ஊசலாட்டங்களைக் கைவிட வேண்டும் என்றும், மக்களுடைய எதிர்ப்பு நடவடிக்கையில் சேருமாறும் அது அழைக்கிறது. ஆளும் கட்சியின் மிரட்டல்களுக்கு ஏ ஐ டி யூ சியும், வலது கம்யூனிஸ்ட் கட்சியும் பணிந்து விடாது என்றும் பந்தில் சேரவேண்டும் என்றும்முதலில் போட்ட தீர்மானத்தைப் பற்றி நிற்கும் என்றும் அது நம்புகிறது.

சோசலிஸ்ட் கட்சியுடன்பிரதிநிதிகள் நடத்திய பேச்சில் எடுக்கப்பட்ட நிலையை பொலிட்பீரோ அங்கீகரிக்கிறது. ஒன்றுபட்டுப் போராடும்—ஆளும் காங்கிரசுக்கு மாற்றாக நிலையான இடதுசாரி ஜனநாயக அணியைதோற்றுவித்து நிறுத்தும்முயற்சிகளுக்கு இது மேலும் வெற்றியாகும்.

இந்தப்பாதையைத் தீவிரமாகப் பின்பற்றும் என்று பொலிட்பீரோ உறுதி கொள்கிறது.

தானாக வெடித்துக் கொண்டிருக்கும் போராட்டங்களில் உறுதியான முறையில் பங்கு கொண்டு வழிகாட்டுமாறு எல்லா கட்சி உறுப்பினர்களையும் பொலிட்பீரோ அழைக்கிறது. இந்தபோராட்டங்களுக்கு பொதுவான திசை வழி காட்டுமாறும் அரசாங்கத்தின் அடிப்படைக் கொள்கைகளுக்கு எதிரான போராட்டங்களாக இவற்றை மாற்றுமாறும் அழைக்கிறது.

## சிங்கை ஹார்வி மில்லில்

# 9 அம்சக் கோரிக்கைக்காக 6 ஆயிரம் தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலை நிறுத்தம்

# இன்று 18-வது நாள்

### கோரிக்கைகள்

★ வீவிங் மில் தொழிலாளர்கள் 1500 பேர்களுககும் சம்பள நிர்ணயம் செய்யப்பட வேண்டும.

★ லேபர்கமிஷனர் கமலரத்தினத்தின் வீவிங் தீர்ப்பு 31-8-71-ல் காலாவதியாகிவிட்டது. அது பற்றி கடந்த 2 ஆண்டுகளாகப் பேசி முடிவு செய்யாததால் சம்பள இழப்பை ஈடுசெய்ய ரூ 300 இடைக்கால நிவாரணம் வேண்டும்.

★ பேசித் தீர்வு காணும் இடைக் காலத்தில் சம்பள இழப்பு கூடாது. சீக்கிரம் பேசி முடித்து விட வேண்டும்.

★ 6500 தொழிலாளர்களுக்கும் ரூ. 100 அட்வான்ஸ் வேண்டும்.

★ பழி வாங்கப்பட்ட 7 பேர்களை வேலைக்கு எடுக்க வேண்டும்.

★ பஞ்சாலை ஊதியக் குழு சிபாரிசு வரும் இடைக்காலத்திற்கு அனைவருக்கும் குறைந்தபட்ச சம்பளம் ரூ. 65 கொடுக்க வேண்டும். இதே விகிதாச்சாரத்தில் மற்ற தொழிலாளர்களுக்கும் இடைக்கால சம்பள உயர்வு கொடுக்க வேண்டும்.

★ லேர்னர்களுக்கு இடைக் காலமாக திரு. கமலரத்தினத்தின் விளக்க அடிப்படையிலாவது உடனடியாக சம்பளமும் பஞ்சப்படியும் கொடுக்க வேண்டும்.

★ லே-ஆப் கிடையாது என மில் நிர்வாகத்தின் ஆத்திரமூட்டல் காரணமாக உள்ளிருப்பு வேலை நிறுத்ததில் ஈடுபட்டுள்ள ஸ்பின்னிங் தொழிலாளர்கள் 4500 பேருக்கும் சம்பளம் கொடுக்க வேண்டும்.

★ சோகாஸ் நோட்டீஸ், 8 நாள் சம்பளப் பிடித்த நோட்டீஸ் ஆகியன வாபஸ் பெறப்பட வேண்டும்.

தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காக கடந்த 22—10—73-ந் தேதி முதல் போராடும் சிங்கை மில் தொழிலாளர்களுக்கு ஆதரவு நல்குவீர்!

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.